ஸ்ரீ நாராயணன் துணை

# "திருநாராயண அந்தாதி"

திருமலை-திருப்பதி தேவஸ்தான நிதி உதவி பெற்ற நூல்

## தெருப்பாடகன்

நாரணா பதிப்பகம்

தெருப்பாடகன்M.S. குமார் B.Sc.,
பத்திரம் எழுதும் முத்தமிழ் வித்தகர்
ஸ்ரீ நாராயணா பயர்வுட் சப்ளையர்ஸ்
திருவண்ணாமலை மாவட்ட எம்.ஜி.ஆர்
கழக மாணவரணிச் செயலாளர்.
77, இராமலிங்கனார் முதன்மைச் சாலை,
திருவண்ணாமலை—606602
திருவண்ணாமலை மாவட்டம்,

முதற் பதிப்பு : 1998

This book is published with the Financial Assistance of Thirumala—Tirupathi Devasthanam under their Scheme aid to Publish Religious book.

விலை : ரூ. 20-00

அச்சிட்டோர் : கவிக்குயில் அச்சகம்,
47, நல்லதம்பி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5
தொ. பே. 8536107



## வாழ்க்கைக் குறிப்பு

இயற்பெயர் : M.S. குமார்

புனைபெயர் : கவிஞர் தெருப்பாடகன்

பிறந்த ஆண்டு : 18-9-1955

பிறந்த ஊர் : திருவண்ணாமலை

பிறந்த மாவட்டம் : திருவண்ணாமலை

வெளியான எழுத்துக்கள் : ஸ்ரீலங்காவின் பீபா ரேடியோ நிலையத்தில் 150 நாடகங்கள், C B S A மூலம், சாந்தோம் கம்யூனிகேஷன்ஸ் மூலம் 100 ரேடியோ நாடகங்கள்.

படிப்பு : B.SC., (இளமறிவியல் பட்டப்படிப்பு)

இவர் முனுசாமிப் பிள்ளை, சகுந்தலா அம்மாள் தம்பதிகளுக்கு, தன் தமக்கை தவமணி அவர்களுக்கு இளையவராகப் பிறந்தவர். பெற்றோருக்கு 3வது குழந்தை. இவர் மனைவியின் பெயர் சரஸ்வதி. சரண்யா, சூர்யா என்கிற இரு மகள்களும், நாராயணன் என்கிற ஒரு மகனும் உள்ளனர். தெருப்பாடகன், விடுதலை என்கிற இரு காவியங்களையும், திருநாராயண அந்தாதியில் 1009 பாடல்களையும், தனிக் கவிதைகளாக 1000-க்கும் மேற்பட்டக் கவிதைகளையும் எழுதியுள்ளார். சினிமாவிலும் கொஞ்சம் அனுபவம் உண்டு. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பல தடவை பங்கு பெற்றுள்ளார். தமிழை நேசிப்பவர். நாராயணனை சுவாசிப்பவர். நல்ல உள்ளங்களை விசுவாசிப்பவர் இவர்.



ப. சிவகுமார், பி.எஸ்ஸி.,பி. எல்.,
The Excecutive Officer,
T.T. Devasthanams,
K.T. Road,
Tirupati-517507
Chittor Dist, A.P.

திரு எம்.எஸ். குமார் என்கிற தெருப்பாடகன் எழுதிய திருநாராயண அந்தாதி நான்கு வரி அமைப்புள்ள 1009 பாடல்கள், எளிய தமிழில், பாமர மக்களுக்கும் புரியக்கூடிய வகையில் எழுதப்பட்டுள்ளது. அன்னாருடைய புலமை இப்பாடல்களை இயற்றி உள்ள விதத்தில் இருந்து நன்கு புலனாகிறது. பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றான, அக்னி சிவ ஸ்தலத்தில் பிறந்த அன்னார். வைணவத்தில் புலமை யோடு எல்லாம்வல்ல ஏழுமலையானை அந்தாதி மூலம் பாடியிருப்பது, ஒரு அரிய செயலாகும். அன்னார் மேலும் மேலும் புகழ் பெற்று, இம்மாதிரி பாடல்கள் புனைத்து இறைவனுக்கு தொண்டு செய்ய இதன்மூலம் எல்லாம்வல்ல உண்ணாமுலை உடனுறை அருள்மிகு அண்ணாமலை யாரை வேண்டுகின்றேன். எனவே திருமலை திருப்பதி தேவஸ்தான நிதி உதவி பெற்று, இப்புத்தகத்தை வெளி யிட்டால் ஆன்மிகத்தில் பெருந்தொண்டு செய்த பெருமை தேவஸ்தானத்தைச் சாரும் என்பதில் எள்ளளவும் சந்தேக மில்லை என தெரிவித்துக் கொள்கின்றேன்.

—ப. சிவகுமார்

**Sri. Srinivasa Ramanujachariar**
Hereditory Trustee
Sri Thiruvikramaswamy Devasthanam,
Sri Emberumanar Jeeyar Madathipathi
Tirukoilur - 605 757.

Live the Name of Narayana
Live the Name of Ramanuja

Dear Devotees of Religion,

Our Lord Sri lumpathy Sriman Narayana makes His glorious presence in the following five stages of param, Viugam, Shabavam, Antharyami and Archai Sages, Alwars and Achariyas do concelebrate These in a grand manner Alwar has written so that the Lord has kept the person of Athianjothi there and was born here He takes incarnations from Heaven First the Lord has taken the incarmations of Ram and Krishna terms Vibavatharam and then He takes the incarmations termed Archavatharam

In the beginning Alwars were born and presented the religion in rich Tamil and in the beautiful instrument of three Chapters of Anthathis But Anthathi we mean that the ending word of the first Quarter (Pasuram) woned be the beginning word of the following quarter (Pasuram) Many poets have sung Anthathis in Tamil

But M S Kumar of Thiruvannamalai has composed 1009 quarters of Verses so wonderfully and exceptionably on Lord Narayana and named it as Sri Narayana Anthathi, Which has to be really commended His humility is also commendable, he calls himself a Theruppadagan (Street Singer) for many years, he should have lived in unisom with his mind, soul and body along with Lord Narayana This Sri Narayana Anthathi by MS Kumar of Thiruvannamalai is due to the grace of Lord Narayana Himself By the grace of the deity who presents herself on the Lotus, he must develop and compose many more garlands of poetries and Anthathis It should multiply in tens, hundreds and thousands

I institute this Mangalasasnam just after worshipping the feet of Lord Sri Poongaval Aayan (Krishna)

*Illumine* *Illumine With many more blessing,*

***SRI. SRINIVASA RAMANUJACHARIAR.***

# PREFACE

The Songs are revelation of devotion and exposition of emotions

I do not belong to the family of devotion I do not know what is orthodoscy and its philosophies I am just one among the common citizens Why? I do not know how to be denoteful, such a ordinary class I belong to

I have not learnt any literature on devotion. My Poverty, Oppressive diseases, The lersons of the people, World's truths, All these are the sole reasons for the birth of Lord Narayana's Anthathi All these songs mostly, are emotions - amalgamated - Stand wearing devotion - shirts, and they are the Channels of Compassion Theses Anthathi are the verses of the foundation alter of Self confidence. There may not be grammar, yet they are colourful festoons of largess of Heart Human culture and humanism let Thirupathi, the Seven Hills fund the Publication of these verses, Let Lorde's fame spread, like tempest, Let the common people, the illiterates and the innounts sing the Lord's Anthathi. Let me secure the benefit of my birth and turnout and compose many more verses Let our Lord Narayana's assistance deseend upon me

I have been writing these verses over 15 years under different times and situations You may find perhaps differing points, words without three dimensions and repetitions. There may not be grammar but you can witness a feeling of devotion being given an up swing. The grammar of Anthathi the ancient rule is strickly followed, the word that ends in an Anthathi becomes the starting word of the next line (Anthathi). All the other rules relating to grammar of Anthathi has been leftout for the sake of true devotion to our Lord Narayana Whatever may be Tamil and the over whelming devotion to Narayana will be there for ever and ever. That devotion alone will make me live for ever. I offer thanks and thanks alone.

Yours Sincerely,

**STREET SINGER**

# SYNOPSIS OF THE SCRIPT :
# SRI. NARAYANA ANTHATHI
# THERUPADAGAN (STREET SINGER)

All the 1009 verses of Sri Narayana Anthathi are sungout in fine different chapters The author took 15 Long years to compose them Over these years the author was fully enjoying the bliss of Sri Narayana Anthathi In simple beautiful Tamil, the author speaks out so that the Anthathi becomes comprehensille even to the absurd illiterate common citizens The following are the fine different chapters

1) To have considered that the Lord was fully indifferent towards poverty and the diseases of the devotee and the Lord forsook him and hard not liberated from the pains of the world

2) The teachings of the world, what he has learnt from the teachings and the actions that consequently followed How the Lord cane to the succour of the devotee to channelize and the inner feelings out of such great help

3) To think and worship the Lord that he alone can Channelize our emotions, to feel angry, and be compassionate To think of Lord as oneself and be eager to see the inner self of the Lord

4) How the Lord made the author excited and sponsored the bliss of cestasy and its stages Deepened in material pleasures. The relationship between the devotee and the Lord, the best of its kind, rather than the world by pleasures To have known this truth, Lord Narayana's complete participation and grace to its maximum. The individual who steps on the path of devotion should know the methods of worship and hymnal praises.

5) How the author considers him a dead stone, wood or mud, and how Lord Narayana enters the same and bestows life to it It becomes Life (Jeevan) and Lord Narayana becomes the Lord God (Paramatma). How the Lord enters the clay of which Ganesha idol is made. The clay idol becomes the life (Jeevan) and the Lord Narayana becomes the God (Paramatma). The relation between the life and the God was actually made out of emotional integration Within themselves out of their known methods, the cultivated habitual feelings, relationships, the commendable way that the world accepted this culture, how it has been revealed, rejection, certain feelings of the effect of those experiences, the stages in the effect. The liberation and redemption of humanity, the best way is Lord Narayana Himself To have known this ultimate fact

The fine different chapters of integrated emotions are out-bursts in 1009 verses of the multi coloured flower-garden of Sri Narayana Anthathi.

*Yours in devotion*

*THERUPADAGAN* **(STREET SINGER)**

# என் தலை வாசல்

ஒரு முன்னுக்கு முடிசூட்டுவிழா! ஒரு கல்லுக்குக் கால்கோள் விழா! சரியாக 18.8.86-ம் ஆண்டு என்னுடைய 31 வது வயதின் ஆரம்பத்தில், இந்த அந்தாதியை எழுதும்படிப் பணித்தான் நாராயணன். எத்தனை வருடம்ஆனால் என்ன? இறைவன் மனத்தில் இருந்துவிட்டால்—இரும்புகூட வீணையாகி இறைவன் புகழ் பாடும்! வெறும்களிமண்ணான என்னை பிள்ளையார் பிடித்தவன் அவனே! அதன் தலையில் கொஞ்சம் அருகம்புல்லை வைத்து, கொண்டாடி மகிழ்பவனும் அவனே! இருபது வருட சோகபாட்டையை இரண்டே நிமிடத்தில் இராஜபாட்டையாக்கி, அதில் என்னையும் பயணிக்க வைத்து இதன் மூலம் ஒரு மைல் கல்லைக் கடக்க வைத்தவன் அவனே! அவன் ஓர் அற்புத அருளாளன்! நித்திய சுகக்காரன்! நிர்மல எண்ணக்காரன்! புத்தியின் சக்தி அவன்! புனிதத்தின் புரவலன்! இன்னும் நல்லன எல்லாம் அவனே! விஷ்ணு என்கிறவன் எங்கும் விரிந்து, பரந்து, எல்லாவற்றுக்குள்ளும் இருந்தும், இல்லாமலும், உண்டாக்கியும், உண்டாகாமலும், எல்லாமாய் இருப்பவன்! ஜோதியானவன்! இந்த உயிரின் மீதியானவன்! இந்த உலகின் என் ஒரே கதாநாயகன். அவனைப் பற்றிப் புகழ் பாட கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவனை நினைத்துத் துதிக்கவும் அவனருள் வேண்டும், எனக்கு நினைவிலே நினைப்பாகி இனிக்கும் எண்ணக் கோட்டை நாயகன் கண்டிப்பாக அவன் ஒருவனே! என்னை எப்போது பற்றினான்? எங்ஙனம் நடத்தினான்? எனக்குள்ளே புகுந்து கவிமாய வித்தை செய்யும் அந்தக் கருப்புக் கண்ணனை ஒருவனே என் ஆத்ம இராகம். அறிவின் தாகம். சுயதோண்டுதலில் அகப்பட்ட சொக்கத் தங்கம்!

எத்தனையோ பேர் எனக்கு இட்டபெயர்கள் பலப்பல. பிழைக்கத்தெரியாதவன், பைத்தியக்காரன், கையாலாகதவன், வீணாய்ப் போனவன், இப்படி எள்ளி நகையாடி இருட்குகையில் தள்ளிய என்னைச் சுற்றிய பணக்கார வர்க்கங்களுக்கிடையில், ஞானக்கிறுக்கனாக்கி மோனம் காட்டிய வானப் பிறை என் நாராயணன்!

மற்றவரின் பொறாமைகளைத் தீயாக்கி, அவர்தம் மனத் தாங்கல்களையே அந்தத் தீக்கு விறகாக்கி, பிறருடைய கேலியையும், கிண்டல்களையும் காலில் இட்டு வெற்றிப் படியாக்கி, 'துணிந்தவன் வெல்வான்' என்கிற சாதனை மந்திரத்தை மூச்சாக்கி—இன்று உங்கள் முன் என் முதற் குழந்தையைத் தவழ விட்டிருக்கிறேன்! எள்ளி நகையாடி எக்காளமிட்ட அந்த 'மனித மிருகங்களுக்கு' தகுந்த பதில் இறைவன் இதன் மூலம் தந்திருக்கிறான்!

காலமும், வறுமையும், நோயும், இன்னும் பல துன்பங்களும் என் மீது பலப்பல துயரக்கோடுகளைக் கிழித்த போதெல்லாம் இன்பமாய் எனக்குள் ஏகி, இதயத்தைத் தொட்டு, கவிச் சந்தம் தந்து, ஏழையைப் பணக்காரனாக்கும் அந்த, 'மோடிமஸ்தான் வேலையை'க் கண்டிப்பாக

அவன் ஒருவனால் மட்டுமே உலகில் செய்ய முடியும். பணம், பணம் என்று அலைகடல் போல் ஆர்ப்பரித்து, அந்த நரகில் வடிவெடுத்தாடும் பாம்பாகி, என்னைப் போன்ற 'அப்பாவிகளைக் கொத்திப் போடும் 'நல்ல நண்பர்களுக்கு' இந்த அந்தாதிப் பாடஞ் சொல்லித்தரும். நான் வழுக்கி விழும் போதெல்லாம் தங்கள் எக்காளச் சிரிப்பைச் சிந்த விட்டு, என்னை சித்ரவதை சிறையிலிட்ட வர்களே மிக அதிகம்! அவர்களின் பண அளவுகோல் என்னையும் என் மானத்தையும் அளந்த போதெல்லாம் அங்கே 'ரோஷக்கார தெருப் பாடகனை'க் கருவில் திருவாய் கருப்பமுகன் பிறக்க வைத்தான்! இந்த நூல் படிப்பவர் களுக்கு ஒரு சாதாரண புத்தகம்! ஆனால் எனக்கு? என் போர்க் குணத்தின் விளைவாய் எனக்குள் அவதரித்த ஒரு போராளியின் தன்மானத் துன்பங்களின் வடிகால்கள் என்றால் அது மிகையல்ல. இந்த விஷயத்தில் கொஞ்சம் நான் அதிர்ஷ்டம் பண்ணியிருப்பதால்தான் என் பயணக் கப்பல் ஆன்மீகக் கடலில் தமிழ் மாலுமியுடன் பயணப் பட்டது. இந்தக் கப்பல் தொட்ட முதல் துறைமுகம்தான் 'திருநாராயண அந்தாதி' என் பகவானின் முதல் திறவு கோலே இந்தப் பதிப்பு.

என் வாழ்க்கையில் பல இன்னல்கள். ஒவ்வொன்றுக்கும் விதி காரணமல்ல. என் உறவின் யெரால் என்னைச் சுற்றி வளைத்தவர்களே என் மீது முதல் சூடு போட்டவர்கள். ஒவ்வொரு நாள் தங்கள் வீட்டு விருந்தில் என்னைக் கருவேப்பிலையாகப் பயன்படுத்தி, விருந்தின் போது துப்பியவர்களே என் பக்கத்திலிருப்பவர்கள்! இவர்கள் தங்கள் வேலைக்கு என்னைப் பயன்படுத்திய உறுதிமொழி களை காற்றில் பறக்கவிட்டு, மாறாக என் வாழ்வில் தொல்லை தரவும் தயங்கியது இல்லை! கறிவேப்பிலை ஒரு நாள் கறியாகும். அதுவும் ஒருநாள் மணந்து பயனளிக்கும்! இந்த உண்மையை மறந்தவர்களுக்கு—இந்தக் கருவேப் பிலையை இறைவன் இதன் மூலம் இன்று கறியாக்கி இருக் கிறான்! என்பதை ஜீரணிக்க வெகு கஷ்டம்தான்! காலத்தின் சித்து அவர்களுக்கு விளங்காது. எத்தனை சாம்ராஜ்ஜியங்களை ஒருவன் ஆண்டு கொண்டிருந்தாலும் இறுதியில் நெருப்பிலோ, மண்ணிலோ மடிவதை பாவம் அவர்கள் மறந்து விடுகிறார்கள். பணத்தின் சுகத்தில்— அந்த சுகத்தின் பலவீனத்தில் காலவிளக்கில் விழும் மின் மினிகள் அவர்கள். அந்தப் பொறாமை மின்மினிகளுக்கு ஒருவகையில் நான் நன்றி சொல்ல வேண்டும்! அந்த கல் நெஞ்சுக்காரர்களின் துயரத்தாக்குதலில்தான் 'ஒரு தெருப் பாடகன்' தோன்றினான். அதனால்தான் இந்த அந்தாதி உருவாகி இருக்கிறது.

தங்கள் காரியம் முடியும் வரை ஒரு பேச்சு, முடிந்தபின் கழுத்தறுப்பு, எதிலும் வியாபார நோக்கம், சுயநலத்தின் மொத்த வடிவம்—இப்படிப்பட்ட மனிதர்கள் நடுவில் சில

சான்றோர்களும் இந்தத் தெருப் பாடகனைத் தொடாமல் இருந்ததில்லை. அத்தகைய மாண்புகள் என்றைக்கும் என் இதயசிம்மாசனத்தில் என்றென்றைக்கும் வீற்றிருப்பவர்கள்.

இடைவிடாத என் இருபதாண்டுப் போராட்ட வாழ்க்கையில் இந்தப் புத்தகமே வசந்தத்தின் வாசல்! என் தாகத்தின் வானவில்! அதுவும் என் உள்ளங்கவர் கள்வன் நாராயணனைப் பற்றிப்பாட அவன் நினைத்ததை என் மூலம் வாந்தியெடுக்க வைத்த, இந்த திருநாராயண அந்தாதி நூல் எனக்குப் பணம் தராமல் கூடப் போகலாம்! ஆனால் அவன் என்னைப் படைத்த இலட்சியம் நடக்க இதுவே தோற்றுவாய் என்பது மிக நிச்சயமாகும். என் ஆத்மாவின் இராகங்கள் நாராயண பூபாளத்தில் மட்டுமே விளைய முடியும். இதன்மூலம் கோடியில் ஒரு நாத்திகனாவது ஆண்டவனை நினைப்பானேயாகில், அதுவே இந்நூலின் முழு வெற்றியாகும்.

இதற்கு நிதி உதவி தந்த திருமலை திருப்பதி தேவஸ்தானம், சப்தகிரி இதழ் எடிட்டர் திரு. இராமமூர்த்தி, என் பிழைப்புக்கு உதவியும், வழியும் செய்த ஆகாஷ் பில்டிங் ஓனர் திரு. சங்கர், ஆகாஷ் முத்துக்கிருஷ்ணன், அசோக் பவன் இராமகிருஷ்ணன், என் சகலை புழுதியூர் K. இராமச் சந்திரன் ஆகியவர்களை நன்றியோடு நினைக்கின்றேன். என்கலை உலகவழிகாட்டி நடிகர் இராஜுவேலு, குள்ளமணி, டெல்லிகணேஷ், L.R. நாராயணன், L.R.N. இராஜ்மோகன், பசிபடத்தில் என்னை ஈடுபடுத்திய பாலசந்தர் ஆகியவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன். கிறிஸ்தவக் கலைக் கழகத் தொடர்பு நிலைய திருமிகு செல்வகுணாளன், வின்சென்ட் (என்னுடைய 150 ரேடியோ நாடகங்களை பிபாஸ்டேசன் மூலம் ஒலிபரப்பியவர்கள்) ஆகியவர்களுக்கும், சாந்தோம் கலைக் கழகத் தொடர்பு நிலையம் ரெமி, சாம்சன் (இவர்கள் என்னுடைய 100 நாடகங்களை ஒலி பரப்பி உள்ளார்கள்.) ஆகியவர்களுக்கும், மறைந்த இதயம் பேசுகிறது பத்திரிக்கை ஆசிரியர் மணியன் அவர்களுக்கும் (இவர் த்ன்னுடைய ஸ்டூடியோவில் ஒலிநாடாவின் மூலம் என் பாராட்டுக் கவிதையை வெளியிட்டவர்) என் மாமனார் அவர்களின் தந்தை K. சாமிநாத உடையாரும் என் தாய் மாமன் C. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் கண்டிப்பாக இந்த வேளையில் நினைக்கப்பட வேண்டியவர்கள். லசைப்பாக்கம் உதவித் தலைமையாசிரியர் காப்பலூர் சந்திரசேகரனும் நினைவுகூறத் தக்கவர். ஆல் இந்தியா ரேடியோ நிலையத்தின் வர்த்தக ஒலிபரப்பு பொன். துரைசாமி அவர்களுக்கும், யூக்கோ வங்கி காஷியர் குருசாமி அவர்களுக்கும், சினிமா வசனகர்த்தா ஸ்ரீகவி அவர்களுக்கும் நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளேன்.

புரட்சித் தலைவர் டாக்டர் பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆர் அவர்கள் இன்று நம்மிடையே இருந்து மறைந்துவிட்டிருந்

தாலும், ஆயிரமாயிரம் இளைஞர்கள் நெஞ்சில் இன்னும் மரணமிலாமல் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார். அந்தத் தலைவனின் படங்களைப் பாடங்களாக ஏற்றுப் படித்ததின் ஒரே காரணத்தாலேயே, இன்றும் இந்தத் தெருப்பாடகன் ஒழுக்கக் கோட்டிற்குள்ளேயே நிற்கிறான். அந்த என் ஒழுக்க வாழ்விற்கு மூலமான அவரை நினைவு கூர்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். இதனாலேயே ஐய்யா இராமவீரப்பனின் எம்.ஜி.ஆர். கழகத்தில் என்னை ஈடு படுத்திக் கொண்டு, திருவண்ணாமலை மாவட்டச் செயலாளர் திரு. M. சொக்கலிங்கம் அவர்கள் மூலமாக, ஐயா ஆர்.எம்.வி அவர்கள் ஆசியோடு இன்று நான் எம்.ஜி.ஆர் கழகத்தின் திருவண்ணாமலை மாவட்ட மாணவரணி செயலாளராகப் பொறுப்பேற்று செயல்பட்டு வருகிறேன். எனவே ஐயா இராம.வீரப்பன் அவர்களுக்கும், மாநிலப் பொதுச்செயலளார் டாக்டர் S. ஜெகத்ரட்சகன் MABL (Ex. M.P.) அவர்களுக்கும், மாநில இணை பொதுச் செயலாளர் A.C. சண்முகம் B.A LLB (Ex. M.P.) அவர்களுக்கும் மாவட்டச் செயலாளர் M. சொக்கலிங்கம் அவர்களுக்கும் நண்பர் K. ஜெயபால் அவர்களுக்கும் என் நன்றி.

'ஈன்றபொழுதின் பெரிதுவக்கும் சான்றோனை' உருவாக்கப் பாடுபட்ட என் தாயார் சகுந்தலா அம்மாள், தந்தை முனுசாமிப் பிள்ளை ஆகியவர்களுக்கு என்றும் கடமைப்பட்டவன். இந்தக் கரியை என்தாய் ஊதி, ஊதி நெருப்பாக்கினார். இந்த நெருப்பின் ஜோதியை என் மனைவி சரஸ்வதி அவர்கள் தாங்கி, தன் பொறுமை மருந்தின் மூலம் என்னை ஆட்படுத்தினார் என்றால் அது மிகையல்ல. அவள் மூலம் பெற்ற செல்வங்களான என் மூன்று அன்புக் குழந்தைகளே என் முதல் இரசிகர்கள் என்றால் அது பொய்யல்ல.

இந்தப் புத்தகம் போட பல வகையில் அன்பு செய்துதவிய நண்பர் அருணை நா. பாண்டுரங்கம், இதயகீதம் இராமானுஜம், உரத்த சிந்தனை உதயம் ராம் ஆகியவர்களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

இதை அழகாக அச்சிட்டுத்தந்த கவிக்குயில் உரிமையாளர் திரு. தேசிகவிநாயகம் அவர்களுக்கும், மற்றத் தொழிலாளர்களுக்கும் நன்றி கலந்த என் வணக்கம். இந்த நூலுக்கு இது மிகப்பெரும் முன்னுரைதான். ஆனாலும் தேவைப்படுவதால் தவிர்க்க முடியவில்லை. ஆசியுரை வழங்கிய திருக்கோவிலூர் ஜீயர் அவர்கள் பாதம் தொட்டு வணங்கி என் முன்னுரையை முடிக்கும் முன்—இந்தப் பிறவியில் என்னைப் பாடவைத்த என் தலைவன் நாராயணனுக்கு, எந்தப் பிறவியிலும் சேவை செய்ய என்பிரார்த்தனை மூலம் அவன் கால்களில் இந்தநூலைக் காணிக்கை யாக்குகிறேன்.

—தெருப்பாடகன்

ஸ்ரீ நாராயணன் துணை

# திரு நாராயண அந்தாதி!

## விநாயகர் துதி

எண்ணும், எழுத்தும், ஏடெடுத்தால் பாடுகின்ற கருத்தும்,
ஏந்தலே உன்னால்தான் ஒருவழியாய் நல்முடியும்,
விதிவென்ற விநாயகனே உன்னருளால் யான் பாட,
மதிதந்து உதவிடுவாய் மாண்புடனே அந்தாதி யானுாற்க!

## முருகன் துதி

மயிலுறை நாயகனாய், மனமுறை பாலகனாய்,
நமச்சிவாயம் தான்சொன்ன ஓம்கார மந்திரமாய்,
ஒருநிலை ஆண்டியாய், உலகின் பெரும்செல்வமாய்,
வந்த என் திருமுருகா, நீயே துணைநின்று அருள் தருவாய்!

## ஈஸ்வரன் துதி

கொன்றைமலர் சூடி, கூத்து பல ஆடி,
கங்கை சுமந்த நற்கதிரொளி வீரனே,
கங்குல் மதியெனவே இடப்பக்கம் உமைதாங்கும்
பொங்குமருள் ஈஸ்வரனே! புலித்தோல் நாயகனே!

## கலைவாணி துதி

ஒலி வருமுன்னே என் தமிழ்சொன்ன தாயே!
கலிகால பூமியிலே யான் காவியம் படைத்திடவே,
உன்தாள் பணிந்து போற்றி நின்றேன்! — கலைவாணி
உன்னருளாலே நாராயண அந்தாதி நீ அருளோ!

## திருமகள் துதி!

எந்தனுயிர் மூலஅணு நாயகனின் பெருந்தேவி,
திருத்தோள்கள் செல்வமெல்லாம் என்னய்யன் பாதம்,
என்றாலே தவறில்லை! என்னுயிர்தாங்கி, திருவாக்கி,
திருவாக்கினிலே நீ வந்தால், நான்பெறுவேன் திருமுக்தி!

## ஈஸ்வரி துதி!

ஆதிமூலன் தங்கையென வந்த நங்கை!
பாதிஉடல் ஏறிவென்ற பங்கயத்து மங்கை!
மீதியுயிர் தாங்குகின்ற பொங்குகின்ற கங்கை!
மேதினியன் தாய் ஈஸ்வரியே இவ்வுலக வாழ்க்கை!

## நவக்கிரக துதி!

சூரியச் சந்திரரும் சுகம் தருகின்ற சுக்கிரனும்,
மீறிய செயல்விதி மாற்றும் சனீஸ்வர நாயகனும்,
வீரியம் இராகு, கேது, பகவானின் அருளான புதனும்,
செவ்வாய் மணக்கும்கோளும், குருவும் போற்றி! போற்றி!

## ஆஞ்சநேயர் துதி!

இராமன் தாள்பணிந்து, அவனில் உயிர்கலந்து,
நீரணைய நின்றபெருந்தேவன் பாதமது தலைதாங்கி,
வீரனாய், வினயமாய் நின்ற குரக்கர் குடியரசே
அனுமன் எனும் திருவருளே! அனந்தன் பாட அந்தாதி
நீ அருளே!

## கருடன் துதி!

நாராயண அந்தாதி நற்பொருள் முடிதாங்கி,
இடர் நீக்கி, எம்பெருமான் வைரக்கால் தாங்கி,
கருணையுடன் கருடனாய் என்உயிர் சுமந்த வடிவமாகி,
கண்ணப்ப மருந்தாய் என்னய்யன் கருடனே நீ வருவாய்!

ஸ்ரீ நாராயணன் துணை

# திரு நாராயண அந்தாதி-ஆரம்பம்

தந்தானே! தற்பெருமைப் பேசித்திரியும் நிலைகொன்றானே!
வந்தானே! வாழ்வில் பெரும்விளக்காய் விளங்கினானே!
நின்றானே! நீங்காதக் கற்பகமாய் நிறைந்தானே!
வென்றானே! பாங்காக அடியேனுக்கு அனபுப்
பாலூட்டியதால்! 1

ஊட்டியதால் உயிர்பிழைத்து உயர்ந்தேன்!
பாட்டினிலே பல்லுறவு தந்தவனைத் துதித்தேன்--அவன்
காலோடு கலந்தேன்; கழலோடு விளையாடினேன்!
பாலோடு சேர்ந்தப் பனிநீரை பகவானும் ஏற்றானே! 2

ஏற்றானே கீழான இந்நாயைத் தன்னன்பால்,
மாறில்லா மாணிக்கம் என் மன்னவனவனில்
வேறில்லாமல் கலக்கவே, இவ்வுலகக் கர்மம் யாவும்,
தூறில்லா மனத்தினான் கண் மனம் வைத்தேனே! 3

மனம் வைத்தேனே மாயவனை உணர்வதற்கே,
மனம் வைத்தானே மாயவனும் எனக்கருள்வதற்கே,
இனம் கண்டுகோண்டானே ஏழுமலை வாசனுமே,
பணம் பண்ணும் கலையெல்லாம் பகவானுக்கப்புறமே! 4

அப்புறமே ஒருநாள் ஆனந்தநடனம் கண்டேன்!
ஆடுகின்றப் பாதத்தின் அழகினிலே மனமே ஆடக்
கண்டேன்!
இடையர்கண் பூத்த எஞ்செல்வம் கண்ணபெருமான்,
கடைந்தானே குழலொலியால் என் மனத்தை! 5

என் மனத்தை இமயளவன் காலடியில் வைத்தேன்!
கீழான அம்மனதும், கீழ்த்தரங்கள் மறைந்துமின்று,
பொன்னுலகின் மின்னலெனப் பூவாகி என்னில் சேர,
விண்ணுலக வேந்தனவன் வினைமாற்றித் தந்தான்
இந்நாளே! 6

இந்நாளே என் கண்ணன் என்னைக்கண்டு கொண்டான்!
மாபாவம் கரைந்துபோகக் குழலூதி—என்
மனந்தன்னை வாங்கிச் சுத்தம் செய்த செம்மலை,
இனம்கண்ட இந்நாளே, என்னுயிரின்பம் பெறும் நாளாம்! 7

நாளாம், நாரணனைக் காண்பதுவும்,—நற்
கோளாம் நமச்சிவாயம் எண்ணுவதும்,
பாலாம் என் பரந்தாமனைத் துதிக்கும் மனதும்,
வேலாம் அவன் கயல்விழியும், என்மீது கருணை
கொள்வதும்! 8

கொள்வதும், கொள்ளாததும் கோமகன் விருப்பம்!
கொள்கையில்லாமல் வாழ்வது சாவூரின் திருப்பம்!
எண்ணமெல்லாம் என்றும் நாரணப் பூவையேத்
தேடும்!—அவன்
வண்ணகமல்லாம் வாழ்வில் நல்வினைகள் சேர்க்கும்! 9

சேர்க்கும் புண்ணியம் பரந்தாமன் வாசல்,
பார்க்கும் எதுவும் கோவிந்தன் கோவில்,
பாரும், அதன்பயனும் பரமாத்மாத் தொண்டே,
ஊரும், உறவும் உத்தமன் உறவொன்றே! 10

உறவென்றே எனக்கருதி உன்வாசல் வந்தேன்,
வரவென்று யான்நினைப்பதுவும் உன் பாதந்தான்!
எங்கும், எல்லாமும் நிறைந்திருக்கும் எம்பிரானே—நீ
தங்குமிடம் என் வீடய்யா, வந்துவிடு! 11

வந்துவிடு வண்ணமணிக்கண்ணா, ஒளிச்சுடரே,
தந்துவிடு தமிழமுதைப் பாட்டினிலே, கவினெழிலே,
என்றுமேயுன்னை நினைத்தேன்; நினைக்கின்றேன்;
நினைப்பேன்!
கன்றுதேடும் பசுவெனவே கருணைகொண்டால்
உயிர்ப்பேன்! 12

உயிர்ப்பேன்; உத்தமனால் உணர்வேன்!
கற்றவித்தையாவும் கைமண்ணளவு ஆனாலும்,
கையும் மண்ணும் கந்தன் மாமனாயிருக்க,
கட்டையில் 'போகுமிது' கடைத்தேறுவதும் எப்போதோ 13

எப்போதோ செய்தபாவங்கள் இன்று பயமுறுத்தும்,
இடியெடுத்து இடுப்பில் கிடத்துவதுபோல் உலகதுன்பம்,
படையெடுத்துப் பரவிவர, பரந்தாமன் சக்கரமே
பக்கபலம் நின்றுயெம்மைப் பரவசத்தில் ஆழ்த்திவிடும்! 14

விடும் ஆசையெதுவும் சாதனைக்கு வழியாகும்!
தொடும் விரல்கள் வேதகமலம் பட்டுவிட்டால் புண்ணியம்,
கடும் வார்த்தை வாழ்வினிலே துன்பத்தின் பிள்ளை,
படும் எதுவும் பரந்தாமன் விளையாட்டின் தொல்லை! 15

தொல்லையெல்லாம் 'நான்' என்பதால் வந்தவினை தானே!
யான், எனது என்ற எண்ணங்கள் மாய்கையில் நீ வருவாய்!
ஊனுயிர் மறந்து, உனைத் தேடுகையில் நீயே,
மானெனத் துள்ளி மடிவீழ்ந்து மகிழ்ச்சி தருவாயே! 16

தருவாயே தார்மீகவாழ்வும், தன்னலமில்லாப் பேறும்,
வருவாயே எனக்குள் புதிதாக, நீயே ஓடுகின்ற ஆறும்,
விரைவினிலே வந்தென்னை ஆட்கொள்ள வேண்டும்,
கரையினிலே நின்றேன், கண்ணன் கலம் வரட்டும்
அன்புடனே! 17

அன்புடனே எனக்குள் பற்றிக்கொண்ட வேத நெருப்பே,
மாண்புடனே தீக்குஞ்சாய் எனக்குள் வளர்ந்து,
கண்வளர்த்தப் பார்வையென, கன்னல் தமிழ் ஊற்றாக,
மண்மீது பிறந்த விண்ணிலவாய், என்மீது ஒளிப்படரவா! 18

வா! வந்தெம்மை ஆட்கொண்டு உய்யவைக்க,
தா! ஒரு தாயன்பை இரக்கங்கொண்டே—என்
வாய் மொழியும், வளமான நடத்தையும்,
செல்வத்தின் செல்வமென திருமகள் நாயகனைச்
சேரட்டும்! 19

சேரட்டும் என் துன்பங்கள் சாவூரை நோக்கி,
ஓடட்டும் என் பாவங்கள் அதன் வழியே பின்பற்றி,
காதல்செய்துக் கனிந்து நான் உருகும் பெண்ணாய்,
சாதலறியாத் தங்கம் என் கண்ணன் காலடியே! 20

காலடியே காலங்களை நடத்தும்—அவன்
கண்ணசைவே ஏழுலகம் இயக்கும்,
விதியென்ற ஒன்றிற்கு மூலமே- ஞாலம்
கதியென்றிருப்போரைக் கடைத்தேற்றவந்த ஆதிமூலமே! 21

ஆதிமூலமே! ஆவோட்டி அருள்காட்டிய நீதி வாசமே!
பாதிமனம் பணம்தேடும்; மீதிமட்டும் உனைத்தேடும்!
நாதியற்ற மானுடத்தில் நற்பொருளேத் துன்பமாகும்!
சேதியொன்று ஜோதிகாட்டும்; ஜாதியற்ற மானுடம்
வாழும்! 22

வாழும் உலகில் யான் என்ற ஒன்று உளதா—என்
நாளும் போற்றும் பெருமாளே எல்லாமே நீ தானே!
துடிக்கின்ற நெஞ்சில் துயரெல்லாம் என்னாலே,
வடிக்கின்ற சிலைபோலே என்னுளளே நின்றாயே
திருமாலே! 23

திருமாலே, என் உயிரெனும் ஆன்மாவே உன் கோவில்,
என் சொல்லெல்லாம் உன் அர்ச்சனை மந்திரங்கள்,
செயலென்று யான் செய்வதெல்லாம் கற்பூரத் தீபங்கள்,
எனது வாழ்வென நீ தந்ததெல்லாம் உன் கோவில்
பிரசாதங்கள்! 24

பிரசாதங்கள் என்பதெல்லாம் கோவிந்தன் பிச்சையே!
பிறர் வாதம் நமை என்செய்யும் நாராயணன் துணையிருக்க,
ஆக்கமும், அழிவும் அரங்கனின் விளையாட்டே,
ஊக்கமாய் மனத்தில் வந்தவன் ஒளிச்சுடர் நாயகனே! 25

நாயகனே, நாராயணனே, கோவிந்த மதுசூதனா!
கோபியர் கொண்டாடும் கோமள மணிக் கண்ணா!
ஐம்பெரும் பூதங்கள் அணிகின்ற மூலமே!
அருள்தரும் பாதங்கள் தாங்கிய செம்மலே! 26

செம்மலே உன்பாதம் இல்லையெனில் இப்புழு எங்கே?
மனைவியும், மக்களும் உடனிருக்கும் சுற்றமும்,
கற்றவித்தையும், கைப்பணமும் என்னைக்
கைவிட்டபோதும்,
கருணாமூர்த்தி நீயெனைக் கைவிடவில்லையே! 27

எனைக் கைவிடவில்லையே, ஒருநாளும் நீயும்!
சுமைதாங்கிக் கழுதையென பாவங்கள் சுமந்தே,
நுரைதள்ளும் வாயுடனே கண்ணீர் சுரக்க நின்றேன்!—என்
பாவங்கள் கரைக்கவந்த கங்கையே நீதானய்யா! 28

நீதானய்யா என் வாழ்வின் கலங்கரை விளக்கம்!
நீயிருக்க இப்புவியில் இனியென்ன எனக்குக் கலக்கம்!
பள்ளம் பார்த்தே நதிநீர் பாயும்—நானும்
உள்ளம் தொடர் கள்வன் கால்பாய்வேன் என்றும்! 29

என்றும் உன்னெழில் காணவே இருகண்கள்,
துயிலும், பேடும்போல் அன்புசெய்யவே ஒருமனம்,
மன்றலில் வீசும் மாலவத்தென்றலே யுமானால்,
விற்றதெல்லாம் உண்மை, யான் பெற்றதெல்லாம்
நன்மை! 30

நன்மை எனவருவது நாராயணன் தயவே!
உண்மை என உரைப்பதும் உத்தமன் நிலையே!
கண்மை நிறத்தவன் கண்புகுந்து மனத்தில் நிலைக்க,
முன்னன்மை யான் செய்திருந்தால் மட்டுமே நிலைக்கும்! 31

நிலைக்கும் என நீ நினைப்பதெதுவும் நிலைக்காது,
மலைக்கும், மடுவுக்கும் எட்டுமோ மாந்தரே,
கலைக்கண்ணன் கருணையொன்றே காலமெல்லாம்,
நிலைக்கும்; நிலைத்தே புவி சிறக்கும்! 32

சிறக்கும் என் வாழ்வு பரந்தாமனன்பு,
பறக்கும் மாந்தரெல்லாம் பரமன் படைப்பு,
கிடைக்கும் எல்லாமும் 'பாலாஜி' பச்சை,
பிறக்கும் மாந்தரிதை நினைந்தாலே யவர் உள்ளமெல்லாம்
பச்சை! 33

பச்சைமேனியன், பசுந்தளிர் உறவினன்!
இச்சைப் பைங்கிளி மணாளன்! இந்திரநேசன்
விண்ணின் தேவர்க்குப் பெருவிருந்தினன்—நெஞ்சில்
மண்ணின் மைந்தனறிந்தவர்க்கு அவனே ஊழியன்! 34

ஊழியன் என்பதெல்லாம் உனைவிரும்பி செயும் செயலே,
ஆழியில் அமைதிகாணும் கண்ணா, உன்னடியே—என்
மேனியில் பட, மேதினியில் புண்ணியம் செய்தேன்!
நாதனே, என் வாழ்வின் நாதமே, நாராயணனே! 35

நாராயணனே! நமச்சிவாயன் மைத்துனனே!
பாராயணம் செய்யும் பாடலெதுவும் பரமனுனைப் பற்றி,
எனைப் பற்றி, எனக்குள் பல்புதுமை செய்து,
எனையாட் கொண்ட பெருமானே, யானுன்னடிமை! 36

உன்னடிமை யெனை சோதித்தல் அவசியமோ—என்
சதைக்குருதி செய்த பாவவுடம்பில் இன்னுமேன்புண்
செய்கிறாய்?
கண்கண்ட தெய்வமே, கண்ணா, என் கண்ணாளா,
பொன்னைப் புடம்போடுதற்கும் ஒருவிதி இல்லையோ? 37

இல்லையோ ஒருநல்லதும் இப்புவியில் எந்தனுக்கே,
தொல்லைதான் என் சுற்றமென்றால், நீ எதற்கோ?
கல்லைக்குடைந்து கருவறைவைத்தாற் போல்,
என்னைக் குடைந்து இன்பமென வந்தவனே நாராயணா! 38

நாராயணா இப்புழுவுக்கு தவுவது உனக்கொரு பொருட்டா?
வேதனைப் பல்லக்கில் பாலைப்பயணம் எதுவரையோ?
துன்பவூர் ஏகுவதும், துயரகீதம் பாடுவதும் முறையோ?
எந்தையே, என்செல்வமே, புவிச்செல்வம் தந்துவிடு! 39

தந்துவிடு எந்தனுக்கே திருமகளின் சொந்தத்தை,
தாய்தேடும் சேயாக அவளபாதம் பார்த்திருப்பேன்,
தாய்வாழ்க்கை நமனோடேப் போகவிட்டே,
நாரணர் பாதம் துதித்திருப்பேன்! 40

துதித்திருப்பேன் தூயவன் அருள்வாழ்வில் என்றனுமே,
உதித்தகதிர் உருகுதற்போல மனமுருக,
விதித்தவிதி எதிர்த்திடவே, விமலனவன் துணையுடனே,
பதித்தபாதம் பார்த்திருப்பேன் பரவசம் பொங்கிடவே! 41

பொங்கிடவே அன்பூற்று நீ சுரக்கவைத்தாய்,
அன்பிற்கும் அன்பெனவே அடியேனைத் தத்தெடுத்தாய்,
கற்றவித்தை, கற்பிக்கும் சக்தி அத்தனையும்,
உற்றவனுன்னாலே, உள்ளத்தில்விளைந்ததடா! 42

விளைந்ததடா உன் விளையாட்டில நல் வாழ்வும்,
களைந்ததெல்லாம் கருணையற்ற மனமதனை,
அலைந்ததெல்லாம் அமரனவன் கால்பற்ற அன்பு
மலர்ந்ததெல்லாம் மாலவனின் மடியினிலே! 43

மடியினிலே தவழும் குழவியென யானிருக்க,
நாடிதனில் குருதியதைப் பாலீந்தும் தாயாக நீயிருக்க,
பாடியதும், பாடுவதும் பரந்தாமன் தயவினிலே,
வாடியதும், வாழ்வதும் உத்தமனின் உறவினாலே! 44

உத்தமனின் உறவினாலே ஒளி கிடைக்கும்!
ஒளியிருந்தால் உலகினிலே வழி கிடைக்கும்!
வழிகிடைத்தால் வாழ்விழந்தார் செயல் சிறக்கும்!
செயலிருந்தால் செல்வத்தால் வீடு நிறைந்திருக்கும்! 45

நிறைந்திருக்கும் எல்லாமும் நாராயணன்!
குறைந்திருக்கும் எல்லாமும் என்குற்றம்!
மறைந்திருக்கும் ஒளியினிலே மனந்துள்ளும்!
மறைத்ததெல்லாம் தந்திடுமே அவனுள்ளம்! 46

அவனுள்ளம் பெருவெளியன் பூங்காற்று!
அவனருளோ அதைவெல்லும் அருவியூற்று!
மனமிருந்தால் மார்க்கமுண்டு, மந்தையுலகில!
தினம் தொழுதால் தேடிவரும் தெய்வமவன்! 47

தெய்வமவன் நெஞ்சதுவே கருவறையாம்,
உத்தமனின் உள்ளெல்லாம் அன்பிருக்கும்,
எத்திசையும் அவன்திசையே, ஒளிவெள்ளம்
புத்தியென இருப்பதுவும் புரவலன் எண்ணம்! 48

எண்ணம், செயலெல்லாம் கண்ணன் வழி,
மண்ணும், விண்ணும் அவனைப்பாடும் ஞானத்துதி,
கண்ணும், கருத்தும் கருப்பழகன் காலடிவைத்தால்,
பொன்னும், பொருளும் புவிக்குப்பையெனக்
குவிந்துவிடும்! 49

விடும், சுடும், என்றபயம் விட்டே,
கடும் எமனின் கங்குல் பயம் ஒழித்தே,
வரும் எதுவும் வடிவேலன் மாமன் செயலே,
தரும் எல்லாம் அவனருளே என்றிரு மனமே, என்றிரு! 50

என்றிருந்தாலும் ஓர்நாள் நம்மைவிட்டே உயிர்நீங்கும்,
நின்று,நின்று பிறர்தின்று சேர்க்கும் யாவும்
நெருப்பில் வேகும்,
மன்றலேறி, மதியூகம் பலசெய்தாலும் மயானம் விடாது,
கருடனேறி யொருவன் வருவானே யவனையுணர்ந்தாலன்றி
உயிர்வெல்லாது! 51

வெல்லாது என்று சோரும் மனமே எழுந்திரு!
மாளாது மாலது மந்திரம் மனத்தில் துதித்திடு!
தீர்ந்திடும் துன்பமே, நின்றிடும் துயரமேது?
அன்றில் மலர்ந்த அமரப்பூவேஎன் ஞானத்தூது! 52

தூதுசெல் என்மனமே திருமகள் செல்வனிடம்,
யாதென அவன்கேட்டால், பக்திசெய்து உறைந்துவிடு,
சுயநலப் பேய்களெல்லாம் சுட்டெரிந்து போயின!
சுயமை மறந்தேன்! கண்ணாஎன்னை ஆட்கொள்! 53

ஆட்கொள்ள வேண்டும் அன்புக்கரசே!—எந்தன்
பேய்ச்சொல்லெல்லாம் அழிந்துபோக—உந்தன்
வாய்ச்சொல்லே என்வாழ்வின் வெற்றி!—என்
தாய்ச் செயலேபோல் வந்த தயாளா நீ வாழ்க! 54

வாழ்க உன்னன்பு; வளர்க புவிப் பாசம்!
நாராயணன் புகழ்கொடியே நம் கொடியாம்!
தாழியும் அவனே! வெண்ணெயும் அவனே!
கடைகின்ற மனமே மத்து! கந்தன் மாமனை ஏத்து 55

ஏத்துகின்ற புகழெல்லாம் ஏந்தலின் புகழே,
பேசுகின்ற பேச்செல்லாம் பெருமாளின் பேச்சே!
ஏசுகின்ற புவியிலே மேவுகின்ற மேகமே!
வீசுகின்ற தென்றலான விமலநாத கீதமே! 56

கீதமே யுன் கீதைதான்—நெஞ்சில்
வாதமே வேண்டாம் வண்ணவனை வணங்க, அவன்
பாதமே சொர்க்கம், சுகம் யாவும்—என்நாரண
நாதமே உலகை என்றும் வெல்லும்! 57

வெல்லும் மனந்தன்னில் துள்ளும் நாயகனே!
அல்லும் பகலும் யானியியற்றும் காவியத் தலைவனே!
பல்லும், சொல்லும் பக்குவப் பாட்டெடுக்கும் காரணமே!
கல்லும் கரைகின்ற கண்ணன் குழல் ஒலியமே! 58

ஒலியமே, உன்னைப்புனைந்தே ஒருயிர் வைத்தேன்,
காவியமே, என் கண்ணைத் தந்தேக் கவிபாடினேன்!
ஆவியில் அடங்குமென் ஐயனே!—மண்ணில்
வாழ்வியல் காட்டவந்த மாணிக்க வீணையே! 59

வீணையே யுன் நாதம் வீடுவந்தது!
பாணைபிடித்தவளும் பாக்கியம் செய்தனள்!
வானைப் பிளந்து வந்த வண்ண ஒளிச் சூரியனே!
நாணைப் போல் நரம்புயர்த்தும் நாணிலத்துக் கரும்பே! 60

கரும்பே! தேனே! கடலொலியின் கருமுத்தே!
அரும்பே! அரணே! ஆன்மாவின் அற்புதச்சுடரே!
விரும்பேன் வேறொன்று விருந்தாக நீயிருக்க,
வருந்தேன் வராகமூர்த்தி அருளிருக்க! 61

அருளிருக்கப் பொருள்தேடி அலைகின்றேன்!
அண்ணலின் காலடிவிட்டே கயமை செய்கின்றேன்;
பாவப் பல்லக்கில் பணப்பூச்சுடனே பவனி வந்து,
பரந்தாமவூர் விட்டே பலகாதம் போனேன்! 62

போனேன் பேராசையெனும் பெருங்காடு—அது
சுயநலப் புலிகள் எல்லாம் வாழும் கூடு!
வீணாய்ப் போகுமுன்னே விழியருகில் ஓர் ஒளி!
தானாய் வந்தவனைத் தலைமேல் வைத்துக்
கொண்டேன்! 63

கொண்டேன் கோபாலனே என் உயிராக,
உண்டேன் உலகளந்தவன் அருளையே உணவாக,
வேண்டேன் இனியொரு பெருவிருந்து—நெஞ்சில்
கண்டேன் கண்ணன் கழலடியெனும் அருவிருந்து! 64

அருவிருந்து அமிர்தமூலம் நாராயணன்,
தரும விருந்து பக்தர்நெஞ்சே, பூதவாகனன்,
பெரும் எதுவும் அன்புப் பிஞ்சு, நாதபூதகன்,
வரும் புண்ணியம் அருட்காட்டும் வண்ணச் சூரியன்! 65

சூரியன் மூடும் பணியுண்டா உலகினிலே—வேத
நாயகன் பாதம் காணாமல் பதமுண்டா புவியினிலே,
அச்சுதன் ஏறிவரும் கருடனே வேதம்,
ஆபத்பாந்தவனின் அடியே பிறவி தீர்க்கும் நாதம்! 66

நாதம் அவன் பாதம், பாதம் உலகுவேதம்!
கீதம் அவன் ரோகம், ரோகம் தேவி மீதம்!
வாதம் அவன் பாகம். பாகம் ஞான பீடம்!
மாதம் அவன் கலகம், கலகம் நல்ல இராகம்! 67

இராகம் பாடும் இராகவா, உனை நினைந்தே,
கண்கள் பேசும் மொழியில் காலதேவனே,
காதல்நோய் கொண்டேன் கண்ணன் அழகிலே,—என்
சாதல்கூட தரணிவாசன் செயல்போலே! 68

செயல்போலே நெஞ்சில் ஒருமித்து வந்து,
மைய்யல் போலே மனமதில் மாசறப் படிந்து,
துன்பப் பாசுரங்கள் அற்றுப்போக—உள்ளம்
இன்பப் பாடல் பாடுதய்யா உன்னாலே! 69

உன்னாலே உடம்பெடுத்து, உயிர்தரித்தேன்!
உயிர் நெய்யில் உத்தமனின் திரியெடுத்து,
அயர்வில்லா தீபமாகி, அகிலத்தில் ஒளியாகினேன்!
அனந்தசயனன் கால்பற்றும் அடிமையாகினேன்! 70

ஆகினேன் ஒரு அன்புக்குழம்பில் அன்பாக,
அந்த அன்பே ஆகினான் அனந்தசயனனும்,
அவன் விட்டே யான் ஏகிப் போகினும்—என்னைக்
கவினுறக் கட்டியணைத்துக் கொள்வான் களிப்புடனே! 71

களிப்புடனே காதல்செய்த திருமால் பூவுமே,
திருமகள் நெஞ்சம் விட்டே என்னில்லம் சேர்ந்தது!
அலைமகள் அவளும் ஐயனைப் பிரிய மனமில்லாது,
அடியேனில்லம் வந்தனள்; அருட்செல்வம்
பொழிந்தனள்! 72

பொழிந்தினள் பூவுலகும் சூழ்கும்படி பலசெல்வம்,
வாழ்த்தினள் வண்ணக்கமலன் பாதம் யானருகிருக்க
கோவிந்தம் பாடி, யான் கொண்டாடி மகிழ்ந்திடவே,
கோமகளும் உடன்சேர்ந்து கூத்தாடி நின்றாளே! 73

நின்றானே என் பொருட்டு தெய்வமாது,
நிற்க வைத்தானே என் கண்ணன் எனக்காக,
ஓர் குடும்பம் குலவி மகிழும் உள்ளத்தால்,
தெய்வபயம் நீங்கி, தெவிட்டாயின்பம் குடித்தேன்! 74

குடித்தேன் குவலயமலராம் அருட்தேனை,
படித்தேன் பரந்தாமவேதமென்னும் அருட்சுரத்தை,
என்னை எடுத்தே, எனக்குள் புகுந்து, அன்புதந்து,
என்னை தன்னாக்கினான், தரணி புகழ் தயாளன்! 45

தயாளன் தயவில்லாமல் தனிவாழ்வு வளருமோ?
நம்பியவர் படகினிலே நங்கூரம் அவனே!
எண்ணியக் கருமமெல்லாம் ஈசன் மைத்துனனே!
பண்ணிய மந்திரத்தால் பரந்தாமப் புகழ்ப்பாடுவேன்! 76

பாடுவேன் பைந்தமிழில் பகவானின் புகழினையே,
ஆடுதவன் அன்புப் பெருமாளின் அருள் நினைந்தே,
கடுகி மனத்தில் நுழைந்து, கற்பனைக்கும் எட்டாத
உறவுதந்து,
நெடுகிலெல்லாம் நெஞ்சம் நிறைந்தவன் தாள்போற்றி! 77

போற்றினேன்! புகழ்ந்தேன்! உன்நாமத்தை வேண்டினேன்!
இருகை சென்னிகுவித்தே வைகுந்த வாசனை
வணங்கினேன்!
என்மீது என்னகுறை கண்டானோ—இரு
கண்ணிருந்தும் என் பார்வை ஏன் மறைத்தானோ? 78

மறைத்தானோ மாயவனும் அன்பினையே எந்தனுக்கே,
பறித்தானோ இளம்பூவை சுடுமணல் மீது வீச,
ஆவிபோயினும் அடியேனுனை மறப்பேனோ? —என்
ஆவியின் நாயகனே அடியேனைக் காப்பாற்று 79

காப்பாற்று கண்ணப்பா, கடிதே வந்து நீயும்,
அனல்மேல் புழுவெனவே அனுதினமும் துடிக்கின்றேன்,
இனம் காணாமல் எங்கே அமைதியானாய்,
இன்பப் பூவே எனக்குள்ளே மலர்ந்து விடு! 80

விடுகின்ற உடலெடுத்தேன் தாய்க்கருவில்
படுகின்ற பாடெல்லாம் என் கருக்காய்,
தொடுகின்ற வானமென வாழ்வு வருமா?
தடுக்கின்ற மனம் விட்டேன், தளிரேநீவா! 81

வாடிய பயிரில் வாழ்வுதரும் நீரானாய்!
சூடிய மலரினுள் சூல்கொள்ளும் வண்டானாய்!
ஆடிய ஆட்டம் விட்டே அடிபணிந்தேன்,
நாடிய அன்பு வாங்கி, நாராயணா அமைதி தா! 82

தாவென்று கேட்டு எதையும் நீ தரவில்லை!
நீயாகத் தந்தும் என்னை ஆதரிக்கவில்லை!
உனையெண்ணி, உனைத்துதிப்பவர்க்குத் துன்பம் தந்தால்,
ஆன்மீகம் வளருமோ? ஆண்டவனைத் தாங்குவாயே! 83

தாங்குவாயே தரணிதந்த துன்பம் போக்கியே,
ஏன் எனக்கு துயரமத்தனையும் அனுப்பிவிட்டாய்,
தினமொரு துன்பம், தினமொருதுயரம் படுவதற்கா,
மனம் வைத்தே மனிதனை இங்குப் படைத்துவிட்டாய்! 84

விட்டாய் யானொரு பொருட்டில்லை யென்றேக் காட்டில்,
பட்டேனதனால் பலதுயரம் இப்புவியில்,
கெட்டாலும் நாரணன் பாதம் நான் மறந்தேனா?
நட்டாலும் *முளைக்காத கலைகலைவேன நாராயணா! 85

நாராயணா என் கண்ணீரால் உன் கால்நனைத்தேன்,
பாராத முகமும் கொண்டே பாவியென்னைத்
துன்புறுத்தலாமா?
காணாத கண்ணீர் வெள்ளம் யான் பெற்ற வரமா?
கண்ணா யுன்னாலே பிழைப்பேன், உலகில்
யார்தடுப்பார்? 86

தடுப்பார்; தகைமையில்லாமல் கிடப்பார்!
கொடுப்பார்; கொள்கையில்லாமல் நடிப்பார்!
எடுப்பார் கைப்பிள்ளையென ஈனன் நானானேன்!
தொடுப்பார் பூங்குழல் மாலையே, தொய்வில்லா
நன்மைதா! 87

தாள் ஒன்று உண்டு, தலைகாக்கும் அதுவே,
நாள் ஒன்று உண்டு, நாரணன் விடிவேயது,
பால் வண்ணமேனியனே, பரந்தாமச் சூத்திரமே!
நூல்வண்ண மேனிகண்ட நூபுரத் தலைவா வா! 88

வா, வா வண்ணமணிக்கண்ணா என்னருகே,
வாசம் வந்த பூம்பாதம் நீயெனக்குக் காட்டிவிடு,
தஞ்சமென்று வந்தவனை நெஞ்சினுள்ளே
வைத்துக்கொண்ட
பஞ்சமில்லா அன்புநதி பரந்தாமன் காலடியே! 89

காலடியே கருணைவைத்து என் சென்னி மீது வந்து விடு!
நூலடி இடைபிடித்த செங்கமலக் கண்ணன் கையுமே,
மாலடித் துதிக்கும் மனிதர்க்கருள் புரிந்தே
நாலடி எடுத்துவைத்து நாராயணன் உதவட்டும்! 90

---

* சிலை.

உதவட்டும் உண்மைபேசுபவன் செயல்களுக்கே,
எம்பிரானை நினைந்தார்க்கு எப்படைத் துன்பம் செய்யும்?
இருப்பவன், இல்லாதவன் எவனாயினும் ஐயனே,
இருகைத் துதித்தாலே அரங்கனும் அருள்புரிந்திடுவானே! 91

புரிந்திடுவானே பல அதிசயங்கள் தம் பக்தர்க்காய்,
இறங்கிவந்து குழவியெனப் பழகிடுவானே அன்புக்காய்,
உறவும், பிரிவுமில்லா உத்தமன் தாள்தன்னை,
ஒருமித்து தவமியியற்ற, உலக பயம் ஓடிவிடும்! 92

விடும் ஆசைகள் விடுதரும்—நாம்
படும் துன்பங்கள் பரமனால் ஓடிவிடும்,
கடும் பஞ்சமும், தொடும் துன்பமும் கண்ணனிருக்க
நம்மன்பு
அடம்பிடித்தால் தீப்பஞ்சாய்ப் பொசுங்கிவிடும்! 93

விடும் எதுவும் விமலன் விரும்பாப் பொருளானால்,
படும் துன்பம் ஏதோ பாழுலகில்—இங்கு
வாடும் பயிர்கூட வண்ணநாதன் முகம் கண்டால்,
தேடும் உறவாகும்; தெய்வீகமதில் கூத்தாடி மகிழும்! 94

மகிழும் மானிட வர்க்கம், மமதையினால் அழியும்—தற்ப
புகழும், சமயமில்லா மொழிப்பற்றும் மீறுகின்ற காலத்தே
இகழும் இவ்வுலகம், இருள்போர்த்தும் புவிச்செல்வம்!
பழகும் நன்மையெல்லாம் பரந்தாமன் பிச்சையாகும்! 95

பிச்சையாகும் உயிர்வாழ்க்கை—நம்
பந்தங்கள் வெறும் குப்பையாகும்,
நமன்கூட விருந்தாளி, நாம் தவறி நடக்கையிலே,
நாம்கூட அறிவாளி, நாராயணன் புகழ்ப்படிக்கையிலே! 96

படிக்கையிலே மாசில்லா மாணிக்கமாய் மனத்தில்
நுழைந்தாய்!
மனத்தின்கண் ஒளிவீசி ஞானகிறுக்கனாக்கினாய்!
சப்தமில்லாமல் மௌனத்தில் பறந்து, மனத்தில்
வளர்ந்தாய்!—என்
ஆன்மாவின் ஒளிவிளக்கே, அடிபணிந்தேன் உன்
தாள் பணிந்தே! 97

பணிந்தேன் உன்னை, பயன்பெற்றேன் அதனால்,
துணிந்தேன் கண்ணே, துயர்துடைத்தேன் ஒருநாள்,
முட்புதர் என்னுள், முல்லைக்கொடியாகப் படர்ந்தவனே,
அருட்புகழ் அடியேன் சேர, அருள் புரிந்த பெருமாளே! 97

பெருமாளே உன்னருளால் உனை நினைத்தேன்,
உன்னினைப்பால் உலகதவம்யாக்க உயிர் வாழ்ந்தேன்!
கண்ணின் கருமணியே, கருப்பழகின் உலகரசே,
என் மனத்தில் வளர்பிறையாய் என்றும் இருப்பவனே! 98

இருப்பவனே, எழிலுலகின் இளவரசே, — நல்
கனகமணி பொற்பாதம் காண்கின்ற பேரொளியே,
இடையர் தம் இளவலே, என் மனத்தின் திண்மையே—யான
காண்கின்ற காட்சியெல்லாம் கண்ணான் ஒளிக்கதிரே! 99

ஒளிக்கதிரே, ஓடிவரும்நதியே, பேரொளியின் பிறப்பிடமே,
தருவிதையே, தமிழமுதின் இனிமையே, தமிழ்தந்த
வள்ளலே,
திருமகளின் நீள் திருவே, செல்வர்க்குச்செல்வமே,
கோடியெனக் கொட்டிவரும் கோமேதகக் காலேயென்
நாராயணா! 100

நாராயணா முன்னம் செய்தவினை முற்றும் ஒழிந்ததா?
பின்னர் செய்யும எதுவும் பிறவியறுப்பதா?
கண்ணா உன்னில் ஊறிய மனமினறே,
என்னில் திரும்பியே, இசையாய் உன்னைப் பாடுமே! 101

பாடுமேயென் பவளநாயகன் திருப்பாதம் தன்னையே,
கூடுமே மனம் கொற்றேவல் செய்தே வாழ்த்திட,
பற்றுவைத்தப் பகவானே யெனை நீ மறக்கலாமா?
பாசமற்றுப் போனாயே, இப்பாவிதன்னை தவிக்க
விட்டே! 102

தவிக்கவிட்டே தடம்மாறி சிரிக்கின்றாய்!
தனியனாய் இருக்கவிட்டே, இரும்பாகி இருக்கின்றாய்!
இதயத்தைச் சுத்தியால் அடித்தடித்தேத் துடிக்கவிட்டாய்!
மானுடப் பிறவியை மாபாவமாய் எனக்களித்தாய்! 103

எனக்களித்தாய் என்றுமுனை மறவாத நெஞ்சினையே,
கணக்கிருக்கும் நாளெல்லாம் கண்ணா உன பாதம்
பணிவேன்!
பொன்னும், மண்ணும், பொருளும் தராத இன்பமதை —
மன்னா
உன் கண்ணின் சிரிப்பு கதியதைக் காட்டி விடுமே! 104

மேனியில் சந்தனமும், சவ்வாதும் கொந்தளிக்கும்!
காதலில் பக்தர்நெஞ்சே களிசெய்து உன்னை நாடி விடும்!
மண்படைத்த மணவாளா, மண்பொம்மை என்னை நீயும்,
பொன்னாக்கிப் புகழ்தருவதும் எந்நாளோ? 105

என்னாளோ ஓரொளி எனக்குள் பாய்ந்தது!
பாய்ந்து மனம் பக்திநீர் கசிந்தது!
தனாலே தயாளா புகழ் துதித்தே ஆடியது!
விண்ணாளும வேந்தனை வேண்டி, வேண்டி அவன் கழலில்
கிடந்தது! 106

கிடந்தது ஓர்கல்லும் கலையெனவே எனக்குள்,
நாரணவுளி ஆக்கியது அதனையே பெருஞ்சிலையாய்,
பூரணக் கலை தெரிந்தது; புரவலன புகழ் புரிந்தது!
புண்ணியன் புணர்ந்ததனால் புவித் துனபம் நீங்கியது! 107

நீங்கியது இன்றே என் துன்பமெல்லாம் எனைத்
தாங்கியவன நாராயணன் என்றுணர்ந்த காலம்,
ஏங்கி இருந்தபோது வாராமல் இன்றே வந்தது—இனி
தூங்கியிருந்த நேரம் ஒழிந்தே, விடியலாய் விழிப்பு
வந்தது! 108

வந்தது எல்லாம் நாரணன் இன்பத்தேரே அது
தந்தது எல்லாம் சாதனை மரவேரே,
என்றும் எனக்குள் பற்றிய நெருப்பு இன்றே
தீபமாகியது— இனி
எம்பெருமான் நாராயண அந்தாதியே என்
வேதமாகியது! 109

உ

ஸ்ரீநாராயணன் துணை லாபம்

# திரு நாராயண அந்தாதி

## நவகிரகக் துதி

எந்தை நாராயணன் தந்த விதி கிரகங்கள்
காலக்கிரமத்தில் கடமை செய்யும் மூல மந்திரங்கள்
சூரியரும், சந்திரரும் சுடர் வெள்ளி, புதனோடும்,
வீரியச் செவ்வாய் குருபாம்புகளும், சனியோடு
ஓர் குடும்பம்! 1

## சூரியத்துதி

கிழக்கு முளைத்து மேற்கில் களைக்கும்
வழக்க நாதன்' வண்ண ஒளிச் சூரியன்
தழைக்க வைக்கும் உயிரினங்கள் வணங்கும்!
சிங்கச் சூரியன் சிரமே தாழ்த்தி வணங்கு! 2

## சந்திரத்துதி

ஈசன் பிறையவன், கதிர்குளுமை தருபவன்,
கடகத்தில் ஆட்சியாய், ரிசபத்தில் உச்சமாய்
காலக்கணக்குக்கு தானிருக்கு மிடத்தையே இராசியாய், 3
பத்தாண்டு பல நன்மை செல்பவனே, சந்திரனே வாழ்கவே!

## சுக்கிரன் துதி

காரகங்கள் பலவிருந்தும் காமந்தனை,
சிறப்பாக செயப்பண்ணும் அசுரகுரு சுக்கிரனே,
உன்னருளால் செல்வமெலாம் தானாகத்தேடிவரும்,
உனை எண்ணின் காலமே கடிது கைகூடிவரும் 4

## புதன் துதி

மாலே ஒரு அம்சமாய், மனம்படிக்கும் கிரகமாய்,
கன்னியிலே ஆட்சி, உச்சம், திரிகோணமும்,
மிதுனத்தின் ஆட்சியையும், மாட்சியாய் நிலைப்படுத்த,
மாயவனே கிரகமென மனமாற வந்தவனை
வணங்கினேன்! 5

## செவ்வாய் துதி!

வீடு, மனை, வீரம் யாவும் விரவி நின்றிடும் செவ்வாயில்,
முருகவேள் இருப்பதால் செய்தவினை, செய்வினை,
கருகிவிடும் கர்மத்தால், கடகத்தில் நீச்சமானாலும்,
காப்பாற்றும் செவ்வாயே, பூமிகாரகனே வாழ்கவே! 6

## குரு துதி!

தனம், செல்வம், தரணியோர் பெறநினைக்கும் வாரிசு,
துன்பங்கள் ஓடும் நிலை, குருபார்வையாலே பெற்றவிலை,
குன்றேறி சாதகத்தில் நின்றிட்டால் வேறில்லை,
உயர் வாழ்க்கை வந்தடையும் குருவாலே, சரணம்! 7

## இராகு துதி

யோகத்தின் நாயகனாம்! புகழுக்கும் காரணமாம்!
விதிவலியை செயல்படுத்தும் முறைதனிலே கரும்பாம்பாய்,
ஈராறு வீட்டிலும், எதற்குமிலா அதிகாரம் பெற்றும்,
காரகத்தில் அமர்ந்த இராகு கண்முடி வணங்கினேன்! 8

## கேது துதி

ஞானத்தின் நாயகனை, நற்றமிழுக்கும் வேதியனை,
மோனத்தவம் தானமாக தந்துதவும் கேதுவையே,
காலயிசை காதில்பட காலில வீழ்ந்து வணங்கினாலே,
தானமெலாம் தரணிவரும்! தான் பிறந்த நிலை உயரும்! 9

## சனி பகவான் துதி

ஈசனுக்கு அடுத்த பெயர் இவன் ஒருவனுக்கே.
இவனிருக்கும் நிலை உயன்றிருந்தால்,
உலகில் வேறில்லை இன்பமே, சனி
வினையனுக்கும் கருவதானே, சரணடைந்துப் பாடிவிடு! 10

## விநாயகர் துதி!

கொன்றைமலர் பிறைசூடும் கூற்றுவனின் தாண்டவமும்
என்றைக்கும் இவ்வுலகில் இசைந்திசைந்து நின்றாடும்
அன்றலர்ந்த அனிச்சமென ஈசனவன் முதற் புதல்வன்
விநாயகனே! விக்கினமில்லாசொல் நாயகனே
துதிக்கின்றேன் 11

## முருகன் துதி

துதித்து மனந்துள்ளுகையில் கைவேலும் காத்திடுமே
உதித்த கதிர் உருவமென உறைந்திருக்கும் ஞானச்சூத்திரமே
மதித்த பனித உயிர்க்கே மருந்தான வேதசாத்திரமே!
விதித்த விதிநாயகனே, மால்மருகா எனைக்
காத்திடுவாய்! 12

## சரஸ்வதி துதி

காத்திடுவாய் கல்வியாலே, கனகமணி பிரம்மன் அணி,
மாத்திடுவாய் மற்றதுன்பம் மனம்வெல்லா விதி ஊருணி!
சாத்திடுவேன் சரஸ்வதியே என் உனக்கு தாயே! நீ
காட்டிடுவாய் நாரரியண அந்தாதி நானெழுத! 13

## லஷ்மி துதி

நான் எழுதும் நாராயண அந்தாதி திருப்பொருளே
நான் எனும் மமதை நீக்கி நீ அருளே!
யான் புகழ்கண்டு நாரணர் பாதம் வேண்டுவது
நானென்பதைக் கொல்லவேத் திருததாயே! 14

## லஷ்மி துதிவேறு!

திருத்தாயே, திருவருளே, திருவருளார் மதியொளியே,
மாணிக்கவீணையே, மரகதப்பதுமையே, கொடியே,
காணிக்கையென்னுடல் ஆவிபொருள் அத்தனையும்,
வாணிக்கணவனார் அப்பனே, லஷ்மிநாரணா! 14

## லஷ்மி துதிவேறு!

நாரணா மார்பதக்கம், நற்செல்வர் கூர்விளக்கம்,
நாவாலே நான்பொன், மணியுலக செல்வஅணி,
சாவினை பாட்டாலே யருள்பெற்று, ஐய்யன்
பாவாலே அவன் திருப்பாதம் யெனக்குக் காட்டு! 16

## லஷ்மி துதிவேறு!

காட்டென மனமொப்பிக்கைகுவித்தேன்,
கருணைகொள் திருமகளே! ஞானவனின் ஞானமே!
நல்ல செயற் காரணமே! நாரணர் மதியே!
அல்லலை நீங்க அருள்செய் அம்மாவே! 17

## பார்வதிதுதி!

அம்மா நீ சகலமும், சக்திவேணி!
சும்மாயிருந்த மனத்தில் புகுந்தஞானி!
சுடுகாட்டரசனின் இடப்பக்க இராணி!
சடுதியில் கவிதை தா ஈசனார் தங்கமேனி (நீ)! 18

## ஈசன் துதி (அ) அண்ணாமலையின் துதி!

தங்கமே நீ தந்த உடலெடுத்து திருஅண்ணாமலைப்
பிறந்தேன்,—என்
அங்கமே, ஐய்யனால் முச்சுவிடுவதும் சுபத்தன்மை—தான்!
ஒளிக்கும், ஒலிக்கும் உவமையாய் நின்று—என்னைக்
கணிக்கும் திருவண்ணாமலை, என் செல்வத்தங்கமே! 19

ஸ்ரீ நாராயணன் துணை

# திரு நாராயண அந்தாதி-ஆரம்பம்

தங்கமே நீயெனத் தொடங்குகின்றேன் தளிரரசே
தங்கம் போற் மங்கா உன்புகழ் சிறியோன் நான்—பாட
தங்கியே நீ கருப்பொருளாய் கனிந்து வரவேண்டும்!
தாங்கியாய் நீயிருந்து, ஆன்மா தாங்குவாய் பசுந்தளிரே! 1

பசுந்தளிர் வார்துளசியணிந்து ஒரு,
பகலவனாய்ப் பள்ளிகொண்ட பெருமாளே,
இகபரசுகம் யாவும் உன்னருளால் யானாகாண,
மறலி கைதீண்டா திருப்பாதம் வேண்டும்! 2

வேண்டும்! வேண்டும்! வேதநாரணனே நீவேண்டும்!
தூண்டும்! தூண்டும்! என்மனமே யுனைக்காண,
மீண்டும், மீண்டும் உன திருப்பாதம் எனாளிடையில்,
தாண்டும், தாண்டும் தன்னிகரில்லா உலகப்
பெருஞ்செல்வமே! 3

பெருஞ்செல்வமுன்னருளால் இப்புவி வாங்குவேன்!
வாங்கியதை ஆன்மநாராலே நீள்மாலை தொடுத்து,
நிறைந்த யிரு கண்ணீர்க்குளத்தில் நீராயொன்று,
கரைந்தயென் மனத்தால் கரையிலா பூஜை செய்திடுவேன்! 4

செய்திடும் பூஜையில் யெனை நெய்திடும் நெடுமாலே!
உணர்ச்சியை அறிவுதாக்கும், ஆனாலுமுன்னினைவால்,
உணர்ச்சியே மேலோங்கி உன்னன்பில் தோயும்!
எண்ணும் எண்ணம் எல்லாமும் உனைக்காணின் மறக்கும்! 5

மறக்குமுயர் மாற்றம்காண மன்னவனே,
மனதில் பதிக்கும் உன்பாதம் விண்ணாளும்,
எந்நாளும் திருவுடனே யுறைந்த உன் நீலமேனி,
கண்ணாளும் பக்தருக்கே! கண்ணா நீயே சக்கரபாணி! 6

சக்கரபாணியே! சங்கே! சலங்கையொலி காற்றே!
ஆதிசேடன் படுக்கையிலே அமர்ந்த பெருமானே.
ஆதியிலே திருப்பதியை அடைந்த இடையரரசே!
ஆன்மாவின் நாயகனே! அண்ணலே! நாரணா! 7

நாரணா! நாரணா! என நா சொல்லி விட்டால்,
காரணம் கருதாமல், கணக்கும் பார்க்காமல்,
கட்டுண்ட நாகமாய் பக்தி மகுடியாலே,
கட்டுப்பட்டக் கருப்பழகே; கனகமே! 8

கனகமே! எல்லாமே யுன்னாலே! உன்வீடு,
என்மனது ஐய்யா! யென்னைவிட்டுப் போவதுமேனோ?
இன்னோரர் பக்தனின் கண்ணீராறு இழுத்ததோ?
தவனேரில்லா, தலைவனே! தாங்காது மனமே நீ வா! 9

நீ வா என்றவுடன் தகுதி பாராமல்
தலைபாரம் பார்த்து, அதுஇல்லாது இடம்தேர்ந்து,
தலைகீழே வாயென்றாலும் சடுதிவந்து,
தாங்கும் நாராயணா! நவகோள் நாயகா! 10

நாயகா! நாரணா! நான்மறை மூலவா!—நீ
நல்லதமிழ் இலக்கணமாய் மாறி வா!
மாயவா! கோவிந்தா! மனவீணை சங்கீதா!
மாற்றுமென மாறியெனை யாட்கொள்ள வா! 11

ஆட்கொள்ள வந்த அரசே! அற்புதமே!
அநாதியாய் நின்றபெரும் பரம்பொருளே!
நீங்காத கற்பகமே! தூங்காதயிமையே!
துன்பப் பெருங்காயம் கரைக்கவந்த நீரே! 12

நீரே! நீள்வானக்காரே! நெஞ்சத்தேரே!
பாரே யுனைப்போற்றும்! பக்திவெள்ளம் பாய்ந்தோடும்!
மாரே கதியென மறைந்த இதயமும் என்றும்,
மாலே! மாலே! எனும் மாயக் கண்ணா! 13

கண்ணா! மன்னா! களிந்தயன என்னமே!
உன் வண்ணம் பாடுதற்கு உருவானேன் திண்ணமே!
அன்னமே! ஆசைக்கனவே! அன்புருவே!
என்எண்ணம் உன்திருநாமம் உண்மையே! 14

உண்மையே! அணுவொளிக்கதிரே! பிரபஞ்ச
நன்மையே! போற்றினேன் சென்னி வணங்கியே!
திண்மையே! உன்நாமம் எண்ணின் இன்பமே!
தண்மையே! நீயில்லையெனின் யேது புவிவாழ்க்கை! 15

புவிவாழ்க்கையெனும் பெருவெள்ளம்,
எனைச் சேர்ந்து மூழ்கடிக்கும்,
பொருட்சுழியோ சுற்றி, சுற்றி உள்ளிழுக்கும்!
அருட்பொருளே! நீ படகாய் வாராயோ? 16

வாராயோ, வண்ணமணிக் கண்ணா! பொன்னவனே!
தாராயோ, பூமனை நான்காணும் கனவே!
காராகிக், கருவாகிக், கல்லுக்குள் தேரையென,
பாருலோர் பாடவந்த ஆனந்த பைரவி! 17

ஆனந்த பைரவி சோதரா! மதுசூதனா!
வான்வந்த பெருநிலவே! வானவா!
நான்பாடும் தகுதியெனக்கிட்டப் பிச்சை!
எப்பிறவிப் புண்ணியம் இப்புவியில் வாய்த்ததோ? 18

வாய்த்ததோப் பொய்வாழ்க்கை! கண்டதோ மெய்நினைவு!
சாய்ந்ததோ நாத்திகம்! சாத்மீகம் ஆத்திகம்!
பாய்ந்ததோ உன்பக்திவெள்ளம்,—இன்று
வாழ்வதோ உன்னினைவினாலே பக்தியாலே மெய்
சோர்ந்தேன்! 19

மெய்சோர்ந்தேன்! கண்கலங்கிவாய் பிளந்தேன்!
நடை தளர்ந்தேன்! நல்லுலகில் பொய்யுடம்புப்
—போர்த்தி நின்றேன்,
துன்பப் பல்லக்கைச் சுமக்க ஒரு வழி தேடினேன்,
இன்பப் பல்லக்காய் வந்து நீயும் வழியாகினாய்! 20

வழியாகினாய்! வானவனே! வண்ணங்கள்
விழியாகினாய்! ஞானவனே! கன்னங்கள்
உப்பவே குழலூதினாய்! அதில் கீதையும்,
பாடியே மீண்டும் மனிதரை கருவைத்தாய் தாய்
—வயிற்றில்! 21

தாய்வயிற்றில் பிறந்தகடன் தீர்ப்பதற்கே கடன்பட்டேன்!
தாரா, மக்கள் வளர்வதற்கே நான்மீண்டும் உடன்பட்டேன்!
உனைமறந்து உலகவாழ்க்கை பாதிமென்றேன்!
அதுகசந்துப் போனதாலே அற்புதத்தைத் தேடி
நின்றேன்! 22

தேடி நின்றேன் பணபபையை, நீ ஒடிவந்தாய்!
கூடி நின்றேன் குற்றம்செய்ய, நீ நாடிவந்தாய்!
பாடிப் புகழ்பாடுமருள் பரவவந்தாய்—நான்
ஆடி, ஆடி மகிழ்வதற்கா என் விடுவந்தாய்! 23

வீடுவந்தாய்! விடெனும் கூடுளைரப்பாடு என்றாய்!
மாடென உழைத்தது வீணடா! அடமானிடா!
நாடடா ஞானச்சூத்திரம் தேடடா தமிழ்ப்
பாட்டடா! கண்ணன் பாத்திரம் புவியடா! 24

புவியடா! புசமுடா! பூதங்கள் புரவலன் நீயடா!
கவியடா! கதையடா! கணங்கள்ன் நாயகன் நீயடா!
உறவென்றும், பிரிவென்றும் உணராத உத்தமன் நீயே,
இன்பமும், துன்பமும் எல்லாமும் ஒனறாகக் கொண்டவன்
நீயே 25

நீயேகதி நிமலனே! உன் வாசல் காலவிதி!
மாயே யுன்பாதம் நவகோளின் ஆதாரம்—செல்வத்
தாயே உன்மார்பில் புரிவாளே திருநடனம்!
வாழ்வே உன்னாலே, வணங்காதப் பேருண்டோ
எந்நாளும்! 26

என்னாளும் உன்னினைவில் என்னறிவுமயங்க,
கண்ணாளும் காந்தனே! கடைவாயில் திறப்பாயே,
பொன்னான உன்மனது நான் பூவைக்க வந்தாலும்,
மண்ணாளுமரசே! விதி என்னவோ, நீ செயததே! 27

செய்ததே தீவினைதான்! செய்வதோ மாதீதான்—நீ
நெய்ததோ நல்வினைதான்! நானணிந்ததோ தீயது—தான்!
மெய்யிது கண்ணா! மேதினி வளர்மன்னா!
பொய்யது போகுமோ! பூந்திருப்பாதம் தெரியுமோ? 28

தெரியுமோ வைகுந்தம்! புரியுமோ பூங்கண்ண விலாசம்!
அறியுமோ, அரியே! ஆனந்தம்பாடுமோ, மனமோ?
தெரியேன்; தெரிந்து நானுணர்ந்திலேன்,
உரித்தயிர் எடுத்தவன் உயர்த்தயிர்க் கடைவானோ? 29

கடைவானோ, கள்வனே! கண்ணெதிரே வருவானோ?
நான்படைக்கும் நற்றமிழை அவனறிந்து சிரிப்பானோ?
அகிலங்கள் படைத்தவனே, ஏழையைத்தான்
நாடுவானோ?—மன
சஞ்சலங்கள் போக்க ஒரு காற்றேறி வருவானோ? 30

வருவானோ? புகழ்தருவானோ! புண்ணியத்தின்
மீனோ? பூமிதென்னில் குறையறுக்கும் வெட்டியானோ?
நானோ? பாவத்தின் படிவந்தானே! முருகன்மாமனே,
வீணே நான் கண்ணீர் சிந்தவோ இவ்வாழ்க்கை! 31

வாழ்க்கைதானோ? வஞ்சகம்தானோ? வீணே கழித்தேன்,
உயிர்ப்புண் புரையோட, நானே வளர்ந்தேன்,
மனப்புழு நெண்டி, நெண்டி ஆசை சீழ்வடிவதால்,
தினம், தினம் சாகிறேன், திருப்பதி மூலவா! 32

மூலவா! முதல்வா! முடிவிலா, இறைவா!
காலமே நீதான் நீலமேகமே!
அகிலமெனும் அணுவை யுன்னருள் திருப்பாதம் அடக்க,
அண்டியவர் நம்பிக்கை பிறக்கின்ற.நாதமே! 33

நாதமேவிய நாயகா! வேதமாகிய மூலவா!
கீதமாகிய சித்தா இரகுராமா!—உன்
பாதமூலிகைப் பரவி வந்தாலே—இங்கே
பாவம் யாவுமே சோரம் போகுமே! 34

போகுமே வீண் பயணம், மானிட ஜன்மமே!
ஆகுமே தலைவிதி உன்னருள் ஜனனமே!
நாரணமந்திரம் நல்லவை செய்திடும்
பூரண ஒளியில் பூந்தென்றல் ஆனவா! 35

ஆனவா! ஆணவம் அழிக்கவரும் ஆனந்தமே
உன்வீடு நான்நோக்க, உன்கருணை வேண்டும்!
என்துன்பச் சுமைதாங்க நீ ஓடிவரவேண்டும்!
கண், காது வைத்துப் பேசும் மானுட வாழ்வு
ஒழிய வேண்டும்! 36

ஒழியவேண்டும் பொய்புரட்டு—மனம்
கழியவேண்டும் காயத்தில் வீழ்ந்த பற்று,
பழியுலகில் வாழ்கின்றேன் பரந்தாமா,
விழியருகே விளையாட வருவாயோ நெஞ்சதிலே! 37

நெஞ்சதிலே உன் எண்ணம் நான் நினைக்க,
கண்ணருகேக் காட்சிகாட்டு சுந்தமாமா!
பிஞ்சுமனம் அனுபவத்தில் பழுத்து விழ,
நஞ்சுகொண்ட நாயகனின் மைத்துனனே நீவா! 38

நீ வாவென்று மனமொப்பி கண்ணீர் உகுத்துவிட்டால்,
கனிந்துவரும் கண்ணனே! நீலமேகமே! வான தெய்வமே!
பணிந்துனை சென்னி புவிவிழ வணங்குகின்றேன்,
துணிந்த நான் உன்மடியில் கோழையப்பா! 39

கோழையப்பா இந்த மாந்தரெல்லாம்—மடல்
தாழையப்பா இவர் உறவு—நெஞ்சு
மழைநீ(ர்) வார்த்தால் கண்திறக்கும்—புவி
மேதையெல்லாம் உன்னடியில் அடக்கம்! 40

அடக்கமாய் இருந்தவர் யாருமில்லை—உயிர்
தொடக்கமாய் ஆனபொருள் பரந்தாமன்!
விடத்தையே நிறமாகக்கொண்டு ஓர்புன்சிரிப்பில்—உலகை
மடத்தையே உருட்டுவான் ஒளிச்சூரியனே! 41

சூரியனே! சுந்தரனே! சுழலுலகின் அச்சான,
காரியனே! கரியனே! காலவெள்ளம்
மாரியாக மாறிவந்து மனுதர்மம் சொன்னவனே!
*ஓரியாக வாழ்வதற்கு உன்னருளே வேண்டும்! 42

வேண்டும்! பயமிலா நெஞ்சு வேண்டும்!
பணிந்துபோகும் உள்ளத்தைத் தரவேண்டும்!
துணிந்து செயலாற்றும் தைரியந்தான் வேண்டும்!
பூசலில்லா பொறுமையுடன் அன்பு வேண்டும்! 43

வேண்டும், வேதனைவாழ்வு துறக்கவேண்டும்,
கல்வியோடு செல்வம் பலபெற வேண்டும்!
கவிதை மனம்கொண்டு வறுமைத் துடைக்கவேண்டும்!
பசியென்ற அரக்கனை படுபாதாளத்தில் தள்ள
வேண்டும்! 44

வேண்டும்! ஆசைகளை அறவே ஒழிக்கவேண்டும்!
பொறாமையால் பூத்தமனம் பொய்வேடம் அணிய
வேண்டும்!
ஆற்றாமைக் கழிந்து அதனால் நன்மைகோடிப் பெற
வேண்டும்!
நாரணன் தாள்மறவா நன்நெஞ்சு வேண்டும்! 45

வேண்டும்! கயமையைக் கடையவேண்டும்!
காயத்தைப் புழுவீடாக்கும் காமத்தைக் கடக்க வேண்டும்!
கால்களிரண்டும் கண்ணன் வீடுநோக்கி நடக்க வேண்டும்!
கழலொளி போதை தரும் கன்னியரை மனம் துறக்க
வேண்டும்! 46

வேண்டும்! நெருப்பின் தணலாம் கோபம் மறைய
வேண்டும்!
கொண்ட கொள்கையை மாற்றாமனம் வேண்டும்;
அண்டா சராசரங்களை ஆள்பவன் உறவுவேண்டும்!
அனந்தசயனனை எப்போதும் நினைக்க வேண்டும்! 47

நினைக்கவேண்டும் நின்செயலை மானிடர்
உணரவேண்டும் உன்னன் புருவை,
நான் யாரையும் அறிந்திலேன், எவரையும்
உணர்ந்திலேன்! உன் வண்ணம் ஒன்றே யறியேன்! 48

* ஓரி--கடையேழு வள்ளல்களில் ஒருவர்.

அறியேன் ஆனந்தம் அது என்னவோ நீதான்!
தெரியேன் திறமை எதுவும், உன்பாதம் அதுதான்!
பாவம் படிக்கவா பாரதம் வீழ்ந்தேன்!
பரமன் மைத்துரை! கமலக்கண் திறப்பாயே! 49

திறப்பாயே யுன்திருவருளே! மனச்சாவி
நீ தந்தால் நான் திறப்பேன் உன்னன்பை!
தெருப்புழுதி யெனையுந்தான் சேர்த்துக்கொள்வாயோ?
வைகுந்த வாசலிலே, வாமனா! 50

வாமனா! வண்ண தோரணா! வானவர் நாரணா!
பூமகள் மங்களம் பூரணப் புண்ணியா!
கலிகாலப் பாவமும், கண்மூடிப் பழக்கமும்,
கல்கி அவதாரம் கொண்டு நீ ஒழிப்பாயோ? 51

ஒழிப்பாயோ உன்வசம் சேரா உள்ளத்தை!
அழிப்பாயோ அன்புநீர் சுரக்கா இதயத்தை!
பழிப்பாயோ பொய்பக்தி வேடத்தை!
விழிப்பாயோ யுன் பக்தருக்கே ஞாலத்தில்! 52

ஞாலத்தில் நான் வெறியனானேன்! உன்
கோலத்தைக் காணாதயிரு புண்முகம் முளைக்க,
பாவத்தைச் சுமக்கவே, அவை காட்சி நோக்கின!
என்றுனைக் காண்பேனோ, அன்றே நான் கண்
பெற்றேன் 53

கண்பெற்றேனானாலும் குருடனாய்க் கவிழலானேன்!
உறவும். பணமும் உறுத்துதய்யா—உன்
எழிற்காண இதயம் துடித்தாலும், உலகபந்தம்
பயில்வோனே யானதினால் பாவமே கைவரப்
பெற்றேன்! 54

கைவரப் பெற்றேன், கைலாசன் மைத்துனனே,
மெய்வரம் கண்டேன், உன்மேனி கண்டேன்!
துன்பம் இனி இல்லை, துயில்கின்ற கோவிந்தன்,
இன்பமாய் இறங்கிடுவான், ஏழுமலைவிட்டு என்
வீட்டிற்காய்! 55

வீட்டிற்காய் வந்தசெல்வம் மாயவனன்பு—வீணை
மீட்டி நான் பாடிடுவேன் கோவிந்தன் புகழே,
ஆண்டாளின் மனப்பூவை சூடிய உன திருப்பாதம்,
வேண்டாதோ பாவியெனையுந்தான்! 56

தான் என்ற அகந்தைவந்து தலைமேல் உட்காரும்,
நான் என்ற எண்ணங்கூடி ஆணவத்தை வளரவிடும்,
வீண் வாழ்க்கைப் புரியாத மானுடரோ குதித்திருப்பார்!
ஊனாசை துறந்தாரே கண்ணனைக் கண்டிருப்பார்! 57

கண்டிருப்பார் கண்ணன்மேல் காதல் கொண்டு,
மறந்திருப்பார் தன்னைப்பார்த்து மாயவனும்,
துறந்திருப்பான பாம்புப் படுக்கை—என் நெஞ்சமோ,
சிவந்திருக்கும் சித்தனவன் திருவிளையாடல் கண்டு; 58

கண்டுகொண்டேன் ஒரு கருப்பழகை,
அது காணின இல்லை பாவப்பொதி—இனி
வென்றிடுவேன் துன்ப அரக்கனையே,
நன்று வணங்கிடுவேன் நாதன் தாளையே! 59

தாளையே தலையாலே வணங்கி நின்றால்,
கயக்களையையே எடுத்தெரிய வழிதெரியும்,
கமலக்கண்ணன் தாங்கிடுவான் தரணிவந்து,
விமலநாதன் பாதையெல்லாம் பூப்பந்து! 60

பூப்பந்து தொட்டு விளையாடும் பூங்கன்னி—நல்ல
புருஷனை அடையப் பாடவேண்டும் கோவிந்தன் கன்னி,
சோத்துக்குத் தாளமிடும் சோம்பேறிகள் இதை.எண்ணி,
பார்த்துழைத்து முயற்சியாலே பயனடையவேண்டும்
சென்னி 61

சென்னியோ சாயும் உன்பக்கம், இருகண்ணுமே,
தேடும் உனை நாடி, நெஞ்சமோ உன்னுள் மூழ்கும்,
நிரந்தரா, கொஞ்சமோ என் வினைகள்
கோபம் கொள்ளாமல் எனை ஆதரிப்பாயே! 62

ஆதரிப்பாயே, அன்புசெய்து என் என்புருக,
ஈனமேனி வாசம் வந்து நீ துன்புற்றாலும்,
என் நெஞ்சில் குடியிருந்து, யெனைச் சுத்திகரித்து,
மலவுடம்பை, மணவுடம்பாக்க வருவாயோ,
மதுசூதனா! 63

மதுசூதனா! மாயவா! ஏந்தலே! இடையரசே!
என்னுடம்பெனும் படியென்றும் அளந்ததோ பொய்யே!
நான்
உன்னுடைய அன்பை அறியாமல் போனதும் யென்
பாவமே!
கருணைகொள் கடாட்சா! காரண, பூரணா! 64

பூரணா! புண்ணியப் பார்வதிச் சோதரா!
உனை வணங்கி நிற்பார்க்கு உலகிலே பகையில்லை!
உனை எண்ணி துதிப்பார்க்கு இடர் என்றும் இல்லை!
அவனவன் மனம் காண நீயே அழகாடி:
(ஆடி... கண்ணாடி) 65

அழகாடி, அருமையாய் விளையாடி,
ஆயர்பாடியிலே தயிர் களவாடி,
உயிரான திருமாலே, உலகவேதம்
பயிரான நிலம்தானே விஷ்ணு பீடம்! 66

விஷ்ணுபீடம் விதிமாற்றும் ஞானகீதம்,
மேலானத் தவமேற்றும் ஞானவரின் வேதபாதம்,
கீழ்மக்கள் துயராறுக்கும் இராமபாணம்,
கீதையாய் உருமாறிவந்த உலக தீபம்! 67

தீபமெனும் கண்கள் ஒளியுமிழ்வதெலாம் பக்தருக்கே,
பாவமெனும் நதியும் பரந்தாமக் கடலில் கலந்தால்,
ஞானமெனும் உப்பும் சேர்ந்து அதை மாற்றும்,
போன புண்ணியமோ கானமென ஒளிவீசும்! 68

வீசும் காந்தியுடன் பேசும் இருவிழிகள்,
மாசற வந்தவனைக் கண்டு மயங்குவதும் என்பதை,
காசு காண்பார் கண்டிலர், மனமாசு நீங்கவே,
பேசு நாரணா! பேதையெனைத் தேற்றயோ? 69

தேற்றாயோ தேம்பியழும் பக்தனையே,
மாற்றாயோ மாதலைமேற் போட்டவிதியினையே,
கூற்றாமோ யானும் துன்பநீர் உகுப்பது—நானும்
சேற்றிலே முளைத்தச் செந்தாமரையாவதும்
எந்நாளோ? 70

எந்நாளோ ஈசன்மைத்துனா உனை அடைவது,
விண்ணாளும் உனக்கே, மண்வீழ்ந்த மனிதப் புழுவையே,
கண்ணாண்டுக் கடைத்தேற்றக் கடின உளமோ? நெஞ்சில
பெண்ணாண்ட பெருமாளே வணங்கினேன்! 71

வணங்கினேன், வையம் வாழ்விக்கும் வைகுந்தா,
தயங்குவதேன், தழுவிடவே நானும் பிள்ளைதானே,
மயங்கிடுவார் செல்வத்தில் மனிதரே—நீயும்
மயங்கினையோ செல்வத்தாய் உடன் கண்டு! 72

கண்டுகொண்டேன் காலன் வெல்வனை,
தொண்டு செய்வேன் வாழ்வின் முடிவுவரை,
விண்டுபோக யெனை நீ ஒதுக்கினாலும்
வண்டாய் நானலைவேன் நாரணப் பூவையே! 73

பூவையே என்னுள் மனதாய் வைத்தவனா நீ,
பூநாகமாய் மாறிநான் வளர்ந்து விட்டேன்,
சீறவும், கடிக்கவும், சிற்றறிவு பெற்றுநான் முயன்றாலும்,
சிந்தனைநாயகா, சிறுபுத்தித் திருத்தி ஒரு சிங்காரம்தா! 74

சிங்காரம் தா, சீரிளமேனி அலங்காரா!
கல்லாய் நீ சமையவில்லை, மனத்தில்
கல்லானார் மனிதரே! இதைக் காணாது
சொல்லாலும் சுட்டெரித்தார் உன்னையே! 75

உன்னையே உண்மையென உளம்கொண்டு வாழ்கிறேன்!
தன்மையே வந்துவிடு, தயங்காது என்வீடு,
கண்மை நிறத்தவனே, களிற்றசைவுக் கொண்டவனே,
ஆதிமூலமே, ஈசனுள் பாதியானவா! 76

பாதியானவன், பரமன் ஜாதியானவன்.
ஜோதியானவன், வீதித்தாதியானவன்,
துதிக்கும் கைகளின் துன்ப நோய்ப் போக்கும்
மதிக்கும் மருந்தானவன்! மருந்துக்கேயொரு
விருந்தானவன்! 77

விருந்தானவன்; ஞானவித்தானவன்!
கரும்பானவன்; காதல்செயும் கள்வனானவன்!
அரும்பானவன்; அழகின் பிரம்மனானவன்,
மருந்தானவன்; ஆத்ம விருந்தானவன்! 78

விருந்தானவன், வீணாசைக்கொண்டவர்க்கு
விஷமானவன், குற்றமெலாம் குனிந்துருகிப் போகும்படி,
பணிந்து தலை பணிப்பவர்க்கு பகவானவன்!
துணிந்து செயும் செயலுக்கு அவன் பலனானவன்! 79

பலனானவா! இக்காயமே ஆசையில் வளர்ந்து,
அழகில் மடிந்து, சீழ்வடியச் சிவந்து நிற்கும்!
மானிடனைச் சோதிக்க மாயப் பெண் படைத்தாய்!—அவர்
கண்ணாலே காமம் விளைவித்துப் பாவப் பயிர்செய்தாய்!80

பாவப் பயிரறிய எண்சாண் உடம்புமே,
ஆவிப் போகும்வரை ஆணவத்தில் மூழ்கி நிற்கும்!
யான், எனது என்ற எண்ணம் பொறாமைகருத் தீனிதரும்!
இதையறிந்துத் தேர்ந்தவரோ மாயவரை சேர்ந்திருப்பார்? 81

சேர்ந்திருப்பார் கோவிந்தனைக் கூர்ந்திருப்பார் புத்தியாலே,
மாதர் முலைகண்டு மனம் மயங்கும் தினம்,
பாதகமே விளைந்திடுமே பார்வைபார்வை கண்ணாடியில்,
பாவமோட்சம் பிறந்துவிடுமே பரந்தாமன் காலடியில்! 82

காலடியில் வாழ்வியலைத் தந்துவிட்டேன்!
என்னுடம்பைக் கூர்போட்டு இதயத்தில் படைத்து
விட்டேன்,
நல்லதேதும் செய்ததாய் என்நெஞ்சம் கூறவிலை,
நமச்சிவாயம் அறிந்தவரே யாருமிலை! 83

யாருமிலை எனக்கு, ஏதும் புரியவில்லை எனக்கு!
காலை முதல் மாலைவரைப் பொய்பேசும் கிளியானேனே!
நீயிருக்கும் நெஞ்சினையே பணத்திற்காய் அடகு
—வைத்தேன்,
உனையெண்ணித் துதிக்காமல் உலக ஆசைக்காய் வலை
—விரித்தேன்! 84

வலைவிரித்தே னானாலும் புண்ணிய மீன் கிடைக்கவிலையே,
தலைவிரித்துப் போட்டகாளி பிணந்தின்று குதிப்பதுபோல,
பணமெனும் பிணம்தின்ன பாவிமக்கள் ஓடுகிறார்,
குணங்கெட்டுக் குன்றுவிளக்கினையே மறக்கிறார்! 85

மறக்கிறார்! மமதை நிரம்பி விழிக்கிறார்! —கண்ட
காட்சியெலாம் கொண்டகோலமாக்கிக் குதிக்கிறார்!
பண்டமாற்றுப் பொருளாய் பல்லக்குலா வருகிறார்!
அண்டநாயகனை அணுக அனுதினமும் மறுக்கிறார்! 86

மறுக்கிறார் தானம் செய நினைவதையே.
தடுக்கிறார் தர்மகாரியத்தை—நெஞ்சுந்
துணிகிறார் பொய், களவு, கொலைச் செய்வதற்கே—என்றும்
பணிவதில்லை யுன்தாளினையே பாவிமக்கள்! 87

பாவிமக்கள் படும்பாடு ஆவி விடுவதற்கா?
காவிகட்டிப் பிச்சைப் புசிப்பதுவும் களவு காண்பதற்கா?
காயக்காற்றுப் போகும்வரை இந்த நாடகமா?
காலக் கடவுளே, கண்ணபிரான் தெய்வமே நீ கூறு! 88

நீ கூறு இதுவும் முறையோ?—உனை
நினைத்ததின் பயனோ இந்தக் கண்ணீர் தானோ?
ஒன்றா? இரண்டா? நான்படும் இன்னல்கள்!
நாதனே துன்பத் தோள்கொடுக்க துணையாவாயோ? 89

துணையாவாயோ இப்பூச்சிதான் மூச்சுவிட,
கணையாவாயோ துன்பக்கோட்டையைத்தான்
தகர்ப்பதற்கே,
பிணையானேன் பெருமானே யுன் சேவடிக்கே,
வினையாவும் தீர்ப்பாயோ விமலநாதனே! 90

விமலநாதனே! கமலக்கண்ணனே! கள்வனே!
கமலதேவியை மனத்தி லேற்றிய மருகன் மாமனே!
கலியுகத்திலே நீ தனிய னானாய்!—புவிமலிந்தப்
பொய் வாழ்க்கைக் காணா குருடனாகினாய்! 91

குருடனாகி, மனநொண்டியாகி, ஆசைமுடவனாய்,
ஆனமனிதரெலாம் போனபாதை அறியேன்,
பிறந்திறந்து பயனிலாமல் தின்று தூங்கி,
வாழும் வாழ்க்கை முறையாமோ? 92

முறையாமோ நினை நினைந்தும் கண்கலங்குதல்,
என் தவறென்ன நானறியேன் ஜனார்த்தனா,
விதைத்த வினை அறுககிறேன், விதிவழியே நடக்கிறேன்,
பதைத்த மனம் தடுப்பதற்கு பகவானே உன்னருளே
வேண்டி நின்றேன்! 93

வேண்டி நின்றேன் விழிசிவந்த நாயகனை,
வேதனையை துடைத்தெறித்து சாதனை யான்
படைப்பதற்கு,
பாதை நீ போட்டுவிட்டால் பழகிடுவேன் இராஜநடை,
பாமா, ருக்மணிக்கு பரவசமாய் ஆனவனே! 94

பரவசமாய் ஆனவுன் பரந்தாமக் கடலினிலே,
வழி தெரியாக் கலமாக ஆடி நின்றேன்!
நீர்நடுவே நீண்டதிமிங்கலமாய் ஆசையும்,
செல்வமெனும் பெரும் பாறையும் கலத்தை மோதுமோ? 95

கலத்தை மோதுமோ? காலத்தையான் வெல்ல
ஏதுவாகுமோ?
படைத்த நீ கொடுத்த குணமெலாம்,
பசிதத மக்கள் பசியாற பயன்படுமோ?
இலையென் பசித்தமனம் பசித்துத்தான் வாடுமோ? 96

வாடுமோ வசைமனது, பாடுமோ பூபாளம்!
இராகங்கள் நாயகா! என்சோகம் துடைக்கவா!
மேகங்கள் கூடிப் பெருங்கதிரை மறைக்குமோ?—மனித
தாகங்கள் தாக்கியே, உனையென்றும் மறக்குமோ? 97

மறக்குமோ மனிதமனம் மாயவனை — அதனால்
துறக்கவோ திருமாலின்பம் இப்புவிதனிலே,
சுரக்கவேப் புண்ணியம் உலகில் உலவும் — அருள்
இரக்கவே ஏழுமலைபாதம், நீ அறியாயோ? 98

அறியாயோ இப்பாவிதனைக் கண் திறந்து,
பார்ப்பாயோக் கதிரவனே களங்கம் துடைக்க,
மனம் மறைத்தது நானேதான் மணவாளா — நீ
மனமிரங்கி வரவேண்டும் யென்குலம் தழைக்க! 99

குலம் தழைக்க, குற்றங்கள் பொறுத்து,
எம் பரம்பரையைத்தான் வளரவிட
இதைப்படிக்கும் அன்பரெலாம்
இகபர சுகம் யாவும் பெற நீ வாழ்த்து 100

வாழ்த்து வாழ்த்து, என்தமிழ் வளர வாழ்த்து
வாழ்த்து, வாழ்த்து இப்புவி ஏழையெலாம் வாழ,
வாழ்த்து, வாழ்த்து, இதையறிவோர் பலபெறவே —
வாழ்த்து.
வாழ்த்து, வாழ்த்து மங்கல நாயகா உன்மனம் போல
வாழ்த்து நீ 101

நீ வாழ்த்த, நான்பாட, இதைக்கேட்டு
அறிவுலகில் அறியாமை அறவே நீங்க,
அரவுப் படுக்கை விடவே அருமுபதேசம்
அடியேன எனக்குத்தர வரவேணடும், மங்கலா, 102

மங்கலா உனை வணங்கி மங்கலம் பாடினேன
நீ தங்குவாய் என் நெஞ்சில் தமிழுடனே,
ஞானம் பொங்குவாய் இனும் பல செயல் செய,
வானம், பூமிகளும் ஞானமாய் நிறைப் பேரரசே! 103

பேரரசே, பேய்மக்கள் செயும் செயலை,
சேய் செய்ததாய்க்கருதி, நல்ல தாயாய்,
கனிந்தருகே வந்து அவர் கன்னத்தில் முத்தமிட்டு
பணித்தன்பு செயும் கண்ணா உனைப் போற்றினேன்! 104

போற்றினேன் மணிவண்ணனையே—நெஞ்சில்
புகழ் ஏற்றினேன் ஞான வடிவினையே,
துன்ப வேரறுக்கும் மருந்தினை கண்ணில்
இன்பமாய் வைத்திருக்கும் காரணன் வாழியே, 105

வாழியே ஆழிஆதியே எம் வாழ்க்கைத் துணையே
பூமியே உன்னருளால் பிழைத்திருக்கும்—ராம
சாமியே நீ யிருக்க என்ன பயமிவ்வுலகில்—தயிர்
தாழியே யுடைத்தாலும் தனித்தெய்வம் நீ கண்ணா 106

நீ கண்ணா என்று கண்ணீர் மல்க சொல்லி விட்டால்
வந்தேன் என வருவாயே தயிர் வாயா,
நானுமுன் திருமலையை அடைந்து தேவ
தரிசனம் தான் கண்டுவிட்டால் வேறேது வேண்டும்
எனக்கே 107

எனக்கே, எனக்கே என என்று நீ சொந்தமாவாய்
தனக்கே, தனக்கேயென செல்வம் சேர்த்திடுவார்
கணக்கேக்கழித்தலாக்கி நீ சிரித்திடுவாய்,
உனக்கே யென்னுயிர் அர்ப்பணம் இறைவா! 108

இறைவா, இடைசதலைவா, நீயென் உறவா, இலை
உயிரா, என்பதனை யாரறியார், உனையன்றி,
வேறறியேன் என்பதுவோ, நீ அறியாயோ,
உன் நாமமே என் மனமந்திரம் ஐய்யா! 109

ஐய்யா உன்மேல் மையலானயென் மனமே,
பொய்யுடம்பை நீக்கி என்று உன்னுள் சேரும்
மெய்யாய் நானறியேன் பூமகள் மையின்
கைவரமான நீயெனைக் காலில் அணிவாயோ
தளிர்துளசியாய்! 110

தளிர் துளசியாய்ச் சிரிக்கும் சின்ன மணிக்கண்ணா!
என் சிந்தையுறும் சிங்கார மன்னா—உன்
செம்பருத்திச் சிறு விரலும், செங்குழம்புக்
கால் பிழம்பும் கண்டதய்யா எந்தன நெஞ்சும்! 111

நெஞ்சு களி கூர்ந்ததய்யா உள்ளம் எங்கும்
அஞ்சுமணி ஆர்த்தெழுந்து கிண்கிணிக்கும்— பூவழிச்
பஞ்சுமனம் மகிழ்ந்திருக்க உன் பூவண்ணம்—
சிவந்திருக்கும், மனம்!
விஞ்சுகின்ற தேவரும், பூதரும் தெரிந்தறியா
உன பாதம்! 112

உன் பாதம் பக்தருக்குத் தெரிந்து விடும் இரு
கண்ணில் பக்தி மழைப் பொழிந்து விடும்!
ஆய் மலர்கள் சூடி நீயும்—திரு
செய்மை மகள் சேர்ந்தனையோ? 113

சேர்ந்தனையோ? முகமே செந்தாமரையோ?
வாய்மையிலே மெய்ககருணை வைத்தனையோ?
வலி உலக துன்பமெல்லாம் ஓடுதறகு—நீ
கலி கால தெய்வமடா திருமலையில! 114

திருமலையில் உன் திருநாமம் எத்திசையும் ஒலித்துவிடும்
கோவிந்தா என்று மக்கள் கூறி விட்டால்
அவர் துன்பமெலாம கூறாமல — ஓடிவிடும்! பிஞ்சு
மனம் கொண்டவனை நீ நெஞ்சுற அணைப்பாயோ, 115

அணைப்பாயோ? அணையிலாக் கண்ணீரைத்
துடைப்பாயோ
கிடைக்காத நிதியின் பூந்திருப்பாதம்,
எனக்காகக் கருணை கொண்டு, இளந்தலை மேல்
அருள் பூண்டு அன்பாக மேவாதோ? 116

மேவாத மேனியெனும் சதைமலையில்,
கூவாத குயிலாலே ஆசை கீதம்,
சாகாத நிலை வந்து சஞ்சலத்தை உண்டாக்கும்
சங்கு, சக்கரபாணி உனைக்கண்டாலே உடல்
சிலிர்க்கும்! 117

உடல் சிலிர்க்கும், உளம் கொழிக்கும் என்
கோவிந்தன் திருப்பாடல் தெருவிலே ஒலித்தாலே,
மலையளவு துனபமும், மழை நீரால் மண் கரைவதைப்
போல்
உலகளந்தபெருமாளால் உருத்தெரியாமல் போய்
விடும்! 118

போய்விடும் பொய்யுடம்பு—கண்மூடிடும்,
மூச்சடக்கி ஓய்ந்ததாலே—அழகு ஒப்பனைகள்,
செய்து மறுநீதியைத்தான் மறைத்தாலும்
கொய்திடுவான் குற்றத்தைக் கோவிந்தனே! 119

கோவிந்தனே கோமேதகக் காலனே
ஆவோட்டி, இடையரில் இடையனாய் விளையாடி
அருந்தத்துவம் சொன்ன உன் திருவிளையாட்டில்
விருந்துண்ண வந்தேன், உன் வீடடைய வந்தேன் 120

வந்தேன் வணங்காமுடி வணங்கி,
தந்தேன் செருக்கழிந்த நெஞ்சை
கண்டேன் திருமாலடிசனின் கருணையன்னை — இனி உறுதி
பூண்டேன் உலகில் வேறில்லை என்று! 121

என்றும் உனை நினைந்து கண்ணீர் உகுப்பதாலே
கன்று பிரிந்த தாயாய் நான் வாழ வேண்டுமா?
நன்று சொல் கண்ணா! நமனுலகாய் இங்கு
கொன்று, கொன்றுப் போடக் குறித்தனையோ? 122

குறித்தனையோ யான் துயர்ப்படவே
விதித்தனையோ வீதிநாயாய் அலைய—நெஞ்சில்
பதித்த உன் பாதம் தவறுமோ – இல்லை
மதித்த மனதை உதைப்பதுதான் உன் நீதியோ? 123

நீதியோ, நியாயமோ? என் தலை விதியின்
முடிவுரை அமுதமுது மாய்வது தான்
மாயவனை நினைந்த உள்ளம், மரண பயம்
கண்டு கண்டு, மாயவனை மறப்பதற்கோ? 124

மறப்பதற்கோ, மனம் படைத்தாய்
மனை விடுவதற்கோ மனைவி தந்தாய்
துணையான உன்னருளால் நான் நடக்க
குணவானே குற்றம் நோக்காமல் வருவாயோ? 125

வருவாயோ? வந்தருள் புரிவாயோ?
பிரிவாயோ, பேயான என் குணம் கண்டுமே
நீயே நடத்திடுவாய் எனைதானே
மாயே இதில் என் தவறென்ன ஈசன் மைத்துனா! 126

ஈசன் மைத்துனனே! ஈன்ற தாய் அன்பாய் ஆனவனே!
நீயே சிந்தித்தாய்! நான் செயலானேன்!
மாயே சிரித்தாய்! நான் மகிழ்ச்சி கொண்டேன்!
நாயே மாறுடன்! நன்மை செய்வேன் கண்ணா! 127

கண்ணா, நான் கலங்கிடேன்--நீயிருக்க
யாருக்கும் இங்கே பயந்திடேன்,
பொன்னுக்கும் பொருளுக்கும் வீங்கிடேன்
பொறுமையுடன் நாராணரைத் தேடுவேன் 128

தேடுவேன், திருக்கண்ண னரை—நான்
பாடுவேன் பரந்தாமக் கடலை—என்றும்
ஆடுவேன் ஆயர் பாடியானை நினைந்தே—விரைந்
தோடுவேன் அவன் திருக்கோயில் நோக்கியே! 129

நோக்கியே கை தொழ எனைத் தூக்கி விடும்,
பாக்கிய நாயகன், பரமன் மைத்துனன்
போற்றிடும் அவன் திருவடிப் பார்த்திட
பாடிடும் அந்தாதி வீணாகுமோ? 130

வீணாகுமோ, வீணான மானிட வாழ்வுமே!
கானலே தானோ என் கண்ணில் நீ சொல்வதெல்லாம்
ஞானமும், மூடமும் ஒன்றெனின்—தானுனைக்
கண்டதும் தவறாகும், இது யுறுதி! 131

இதுயுறுதி, காலத்தை அவனே கணிக்கிறான்
கணித்தே மனித கணங்களை காலத்துள் அடைக்கிறான்
புறத்தேயிருந்து புவிப்புழுவையெலாம் அசைக்கிறான்
சிறுத்தே காரம் பெருகும் கடுகினாய் மறைந்திருக்கிறான் 132

மறைந்திருக்கிறான், மாயவன் உறவை
துறந்திருக்கிறான், உணர்ந்திருக்கிறான்
பக்தரை, உணராமல் உள்ளத்தில்— இருளைக்
குடிவைத்த சிறுமக்கள் உறவு களைந்திருக்கிறான் 133

களைந்திருப்பாயோ மனந்தன்னிலே—நீ
களைத்திருப்பாயோ பாம்புப் படுக்கையிலே—நான்
மலைத்திருப்பேன் உன் கல்யாண குணமே கண்டு,
அலைகடல் அரவமிதவையிலே அமைதியானாய்,
வெங்கடேசா! 134

வெங்கடேச மருந்து வினைதீர்த்துவிடும்!
வேங்கடமலையே வேதனையைத் தீய்த்துவிடும்—நீ
தாங்கடா அந்த தளிர்மேனியாள் தாங்கியவன் பாதத்தை,
தூங்கடா பின் கவலையை விட்டொழித்தே! 135

விட்டொழித்தேனில்லை வீண் வாழ்க்கை,
பட்டழிகிறேன் பணப் பகட்டாலே,
தீவினையால் வீழ்ந்தகுளம் நீர் சுருங்க,
நல்வினையாய் சூரியநாராயணன் காய்ந்திடுவான்! 136

காய்ந்திடும் கதிரவனும் கண்ணன் காலடியில்,
வீழ்ந்திடும் அற்புதத்தை அடியவர் காண,
ஆழ்ந்திடும் மனமே, அரவுசூழ்ந்தவனைப் பற்ற,
ஆழிசூழ் பெருங்கடலாய் விளைந்திடும் ஞானமே! 137

ஞானமே, நல்லத்தயோவனர்களின் ஊனமான
மனத்தையே அறுத்து, அவர் குறை காணும்
சோதனைக் கல்லே, சுயநினைவு அற்றவரின்
இன்ப கானமே, திரிசூர்ண பரிபூரணா!

பரிபூரணன் எங்கள் பவளநாயகன்,
திருத்தேரேறி வருகிறான் வாருங்கடி,
கரியவாணன், எங்கள் காலதேவன்,
கோலம் காண கூடிநீங்கள் கும்மியடி! 139

கும்மியடிப் பெண்ணே, கும்மியடி!
கோவிந்தம் பாடியே கும்மியடி—எங்களின் தெய்வம்
'கோபாலன்' என்று சொல்லியே கும்மியடி!—நம்
காலத்தின் பாடம், அவன் கருவறைப்பாதம் கும்மியடி! 140

கும்மியடித்தால் கோபாலன் வருவான்!
விம்மியழுதால் வேதனை தீர்ப்பான்!
சுத்த பக்திக்கே யுனைச் சுற்றி வருவான்,
மற்றதெல்லாம் நீ கேட்காமல் தருவான்! 141

தருவான் தரணிபொருள், பசும், செல்வம் எல்லாம்,
வருவான் வடிவேலன் மாமன் குறும்புடனே,
திருப்பெறுவதெல்லாம் மனிதனன்பு ஒன்றையே,
திரும்பத்தருவதெல்லாம் அவன் கருணை மழையையே! 142

மழையையே அனுப்பிவைப்பான்— நீ பிறர்
தாகத்திற்கு நீர் தந்தால், — உன்வீடு
ஸ்ரீதேவி தான் வருவாள் — நீ
பிறன் துன்பம் தீர்த்தால்! 143

துன்ப தீர்த்தத்தை தினம், தினம் அருந்தும்,
மெய்யன்ப மக்களெல்லாம் பரம்பொருளைத் தேடாமல்,
பாழாற்றில் வீழ்ந்து காலவெள்ளம் அடித்துப்போக,
பணம் பண்ணும் மந்திரத்தில் பகவானை மறந்தாரே! 144

மறந்தாரை மனம்நோக அவன் காண்பதில்லை,
மாறாக அன்புடனே தாயாகச் சாலப்பரிந்து,
தானாக நம்வீடு சேர்ந்திடுவான்!— ஆனாலும்,
புண்ணியத்தின் மானை பொறாமை அம்பெய்தி யாம்
கொன்றோம்! 145

கொன்றோம் நண்பர்களை, அவர்செய்த உதவிகளை,
மென்றோம் வீண்பேச்சு வதந்திகளைத்
தின்றோம் துரோகத்தால் பெற்ற உருசிகளையே,
என்றேனும் எம்பெருமானை நினைந்துத்
திருந்தினோமோ? 146

திருந்தினோமோ? திருமாலைத்தான் வணங்கினோமோ?
திருமகன் புகழ்பேசும் பாடல்கள் அறிந்தோமோ?
குருட்டு வாழ்க்கையிலே கைக்கோலை இழந்தவராய்,
குற்றத்தை வளரவிட்டு, உன்றுவிளக்கினையே அவித்து
நின்றோம்! 147

நின்றோம் நிம்மதிகெட்டு ஆசையாலே,
மென்றோம் நல்வினை துறநது தீயதையே,
பெற்றோமிலை பெருமாளின தூயஅனபினையே.
விற்றோமே ஆதமாவை ஆசைக்காய்! 148

ஆசைக்காய் காயம் வளர்க்க
அருந்தமிழை இகழ்ந்து, பல்மொழி
வளர்ச்சிப்பேசி, சொந்தத் தாயையே,
வாசலிலே நிற்க வைததோம். 149

நிற்க வைத்தோம் ஆத்திகத்தை,— யாம்
கறக மறநதோம் கணணன காதலையே,
பொற்சரட்டில் பிததளையைக் கோர்த்ததுபோல்,
பிறந்தமதம் இகழ்ந்து, பிறர்மதம் தழுவுகின்றோம்! 150

தழுவுகின்றோம் தலைக்காமம் வைக்கும்வுலை தெரியாமல்,
பழகுகின்றோம் பாவையரைப் பாம்பென வுணராமல்,
அழகிடமே, விடமிடம் என்றுநீ என்றுணர்வாய்?
அன்றே அண்ணலைக் கண்டநாள்! 151

கண்டநாள் முதலாய் நாரணன் என் கனவில்,
தந்தநம்பிக்கைப் பொய்க்குமோ?— இல்லை,
வந்தெனை ஆட்கொள்வதாய் வாய்நிறைய
சிரிப்புமலர் பூத்துமணம் பரப்பியதும் பொய்யாகுமோ? 152

பொய்யாமோ மானுடமும்— பூ
கெட்டவாசம் தந்திடுமோ?
அன்பான உன்பாதம் என்தலையில் பட்டதனால்,
கண்போன குருடனாய் நான் கதறத்தான் வேண்டுமா? 153

வேண்டுமா என் கண்ணீர்—இன்னும்
கேள், நான் உகுப்பேன்,
உனக்காகப் புவிதன்னில் துன்பச்சேற்றினையே,
நானாகப் பூசிக்கொண்டாலும் வாய்சிரிப்பேன்! 154

சிரிப்பேன் என் சித்தனைக்கண்டு,
சிங்காரப் பாட்டுடனே சிந்தனை மாலைவைத்து,
அழுதழுது அவனுக்காய் உவகைப் பிறக்கவே,
என் மனதை ஏந்தலின் காலடிவைப்பேன்! 155

வைப்பேன் என் வாழ்வையே,— அந்த
வைகுந்தன் பரிசாக உயிர்துறப்பேன்,
கைகுவித்துக் கண்கலங்க கண்ணனவன்,
கழல்காண, மெய்சிலிர்க்க மூர்ச்சையானேன்! 156

மூர்ச்சையானேன் மூலத்தைக் கண்டதனால்,
பேச்சற்றேன் பெருந்தெய்வக் காட்சியினால்,
ஈருதடும் கண்ணீரை உருசிப்பதற்கே,
இறைவனவன் தாள் பற்ற யான் முயல்வேன்! 157

நான் முயல்வேன் முகுந்தனைத் தழுவிடவே,
என்றும் நழுவிடா அன்புக்கயிற் சுற்றி,
அந்த இடையனைப் பிடித்தென் இமைச்சிறையில்,
கண்ணடியில் காவல் வைப்பேன் இதுவுறுதி! 158

உறுதிக்கு உவமையான உமையாள்,
கைபிடித்தே பேயுன்னும் பேயனுக்கே,
பேரின்பமாய் தந்து இகம்பிரிச்
சிரித்தச் சிங்காரன் எங்கள் நாராயணன்! 159

நாராயணன், நான்மறை வேதச் சொந்தக்காரன்,
நடுவீதியிலே வருகின்றான் திருவீதிவுலா!
எங்கெங்கு இருக்கின்ற ஜீவனுமே—இன்று
எட்டி, எட்டிப் பார்த்து மகிழும், வருவதோ
கருப்புநிலா! 160

கருப்புநிலா கால்காணின் நெஞ்சினிலே,
விருப்பென்ன வேண்டுமடா மண்ணினிலே,
கோபாலன் திருக்கோலம் பக்தருக்கே,
கோவிந்தன் திருவடியோ எம் ஒருவனுக்கே! 161

ஒருவனுக்கே யுரியவன் ஆனபோதும்—நல்
உலக மாந்தருக்கு இதயமாக நிலவிடுவான்!
அன்பையெல்லாம் கொட்டிவிட்டால் அவன் வருவான்,
ஆணவத்தில் நின்றுவிட்டால் அவன் மறைவான்! 162

மறைவான் மாணிக்கன், மணிசூடிய
மாயவன் புரிவான் பூங்கண்ணைக் காட்டி,
பூரித்துக் கண்ணிலே நீர்காட்டி—நம்
புன்சிரிப்பை யுதிர்த்தாலே செல்வம் பலதருவான்! 163

தருவான் தன்னையே கொன்னை நெய்யாய்,
இருட்டுக்குள் ஒளியாக வந்துதவும்,
முரட்டுக் குழவிதான் அவனென்றால்,
அவன் பெற்ற நானென்றும் அப்பாவிதான்! 164

அப்பாவிதான், அன்னக்காவடிதான்—நான்
கூச்சத்தால் விளைந்த நல்லகோழைதான்!
எதுவாயினும் என்னிறைவன் பொறுப்பான்—திருமகள்
மதுவான மணிவண்ணன் பூம்பாதம் நமனுக்கெதிரே! 165

நமனுக்கு எதிரே, நாராயண பக்தரைக்!
காப்பதற்கே விதி மாற்றி எழுதுவான்!
அந்த விண்ணாளும் வேந்தன் எங்கள்
விதிநாயகன், நல்ல திருமலை பாலகன்! 166

பாலகன், பழுத்தபழமான பரந்தாமன்!
கூளமாய் சதைமனது கொண்டு நானுமே,
பாலமானேன் புவி ஆசைக்கே!— அதை
கூளமாக்கிக் கோவிந்தன் சேர்த்தணைப்பானே! 167

அணைப்பானேயாகில் என்பிறவி முடிந்ததாய்—அன்புப்
பிணையான அண்டநாயகன் அருந்திருப்பாதம்,
உறைகின்ற உத்தமநிலையில்தான் என்சொர்க்கம்,
மறைகின்ற மானுடமே ஒருநாள் மறையும்தானே! 168

தானே, தந்தநானே என்றிசையோடு பாடி,
இருகண்ணை வாசலாய்த் திறந்துவிட்டாள்,
மானாய் வந்து மாயவன் குடிபுகுவான்,
வீணாய் அலையும் மானிடனே நீ அறியாயோ? 169

அறியாயோ ஆழிதுழ் கடலோனை,
அந்த இடையன் இல்லையேல்—இப்புவி
மாடெல்லாம் மேய்வதெங்கே?— புண்ணிய
புல்கானா நிலமாகிப் போவாரே! 170

போவாரே புண்ணியனை நாடிதானே—ஆசைச்
சாவாரே ஆண்டவனை அடைந்தவர்தானே,
மெய்சிலிர்க்க, வாய்பொத்தி நின்றாலே,
கைக்குழலான் சன்னதியில் எல்லாமும் கிடைத்துவிடும்! 171

கிடைத்துவிடும் கிருஷ்ணனின் அன்பு—மனத்தைப்
படைத்துவிட்டால் செல்வப் படையோடு
அவன் நடந்து வந்திடுவான் உன் வீட்டிற்கே—ஆனாலும்
திருநாரணசூத்திரம் அறிந்தவர் யாருமில்லை! 172

யாருமில்லை சூத்திரத்தை உணர்ந்தவரே
சூத்திரனின் சூட்சுமத்தில் நிறைவதெல்லாம் அன்பு
முள்ளை முள்ளால் எடுப்பதுபோல்—அவனை
அளக்கவே அன்புவேண்டும் ஆசைமனிதா! 173

மனிதா நீயழியும் சதைக்கோளம்—இந்த
உடலாசை ஒரு காலகட்ட காமதீபம்—நீ
மருவத்துடிக்கும் இளம்பெண்களெல்லாம் நாளையக்கிழம்
நமன் வருவார் அவர்கண்கூடே இது சத்தியம்! 174

சத்தியம் விளைந்திடும் சண்முகன் மாமனிடம்—அந்த
தத்துவம் நீயறிந்தால் வேறில்லை இன்பம்
நித்தமும் நீசெயும் ஆரவாரபூசையில் அவனில்லை
மொத்தமாய் நீசெயும் புண்ணியத்தில் உலவிடுவான்! 175

உலவிடுவான் உத்தமரின் நாதனிலே
புலப்படுவான் புகழ்விரும்பா மனிதரிலே
கலந்திடுவான் கண்கலங்கித் துதிக்கும் நெஞ்சதிலே
கரைந்திடுவான் தூய அன்பு நீரினிலே! 176

நீரினிலே, நெருப்பினிலே நின்ற பெருங்குணங்கள்—என்
நீலமேகன் உட்குணங்கள்!—இங்கே
யாரெதைச் செய்கிறாரோ அதையவர்க்குத் தருபவராய்
ஆனந்தபூஜ்யமாய் அருஞ்சங்கோதி ஒலித்திடுவான்! 177

ஒலித்திடுவான் உண்மை தன்னை
ஒளிவாங்கிடுவான் அன்புக்கண்ணில்
தீராத மனப்புண்ணில்—தெய்வமருந்துப்
போட்டிடுவான் பூபால மருத்துவனே! 178

மருத்துவனே நீ ஒடிவந்து—என்
மன அசிங்கமென்னும் பெருநோயைத்
தீர்ப்பதும் எந்நாளோ?—திசை தப்பியக்
கலமெனை திருப்புவதும் எப்போதோ? 179

எப்போதோ என்நெஞ்சில் இறுமாப்பு
தப்பாமல் அமர்ந்தாட்சி செய்ததையே
நிலக்களையாய் நீக்கிபெமை அருள்பாலித்த
அனந்தசயனம் இன்றேன், இத்துன்பம் காட்டியதோ? 180

காட்டியதோ வெற்று வாழ்க்கை—நீ
ஊட்டிய உணவில் காமக்கல்லே
சாற்றிய யென்னுடலை ஜனார்த்தனன் நீ
மாற்றியயமைக்க மனம் வைக்கவில்லை! 181

மனம் வைக்கவில்லை, மருக்கொழுந்தைக் காய்கிறாய்
தினம் புலம்பி பணவுலகில் செத்து, செத்து மாய்வதற்கே
எனைப் படைத்து இன்பத்தை மறைத்துவிட்டாய்—அம்புக
கணைதொடுத்தேன் அண்ணலே நீ தோற்பதெப்போ? 182

நீ தோற்பதெப்போ? நான் வெல்வதெப்போ?
நாரணாரத்தம் என்னுடலில் பாய்வதெப்போ?
நமச்சிவாய நரம்பும் அதில் தோய்வதெப்போ?
அரியோடு கலந்த சிவனை அடியேன் அறிவதெப்போ? 183

அறிவதெப்போ என்றுதட்டளவில் சொல்லிக்கொண்டு
முயற்சியின்றிக் கூடிப்பேசி பொய்வேடம் போடும்
பரதேசிக் கோலத்தை, விதிவழியே பழித்து நீயும்
ஏதுமறியாதவன் போலிருப்பதை நானுரமாட்டேனா? 184

நானுரமாட்டேனா, நாத, வேத கமல பாதத்தை—அந்த
நமனையே விரட்டும் உன் வெற்றி நாமத்தை
வெற்றிமகள் உடனிருக்க உனக்கென்ன ஐய்யா—அவ
வெற்றிதனை யான்பெறவே தாயிடம் சாலப்
பரிவாயோ? 185

பரிவாயேல யுன்பக்தனுக்கு நல்லதர்மம்
அதனாலே யான்பல்பெற வாழ்த்துவாயோ?
எப்படியாயினும் நானுன சிறுகுழந்தை
எடுத்தெனை ஆட்கொள்ளவேண்டும் அன்புமயமே! 186

அன்புமயம் ஆனவன் திருவிக்கிரமன்—அந்த
கோவிந்தன் கோவிலாக என்னுடல் தந்தேன்
உளமென்னும் கருவறையில் மூலவனே
இளமானாம் திருவுடனே உறைந்த நாயகனே! 187

உறைந்த நாயகன் கரைந்தயென் மனத்தில்
பறந்துவரவே என் பரந்தாமக் காமமும்
பலித்ததனால், பக்திக் கருமுற்றிப் பருவத்தில்
முக்தியெனும் பிள்ளைபெற முகுந்தனே துணை
செய்வான்! 188

துணைசெய்வான் நாணிலத்து நல்லவர்க்கு
இணையாவான் இதயத்தில் அன்புப் படைப்பவர்க்கு—நம்
மனைவி, மக்கள், பெண்டு பிள்ளை வாழ்வதற்கே
மனைவிதனை மார்அணிந்த மாயவனைப்
பொறுப்பாவான்! 189

பொறுப்பாவான் பணம், பொருள், செல்வம் தருவதற்கே
வெறுத்தாளும் மனங்களைச் சேர்த்துவைக்கும் சீனுவாசன்
கருத்தான அறிவுதந்து, கண்ணிலே குடிவந்து
சிறுத்தமனம் கொண்டஎன்னை சீர்திருத்த வருவானே! 190

வருவானேயெனப் பக்தர் ஞானம் நிமிர்த்திநோக்க
அவரையே நெருப்பு தின்னும் கோழியாக்கி
இறுதிவரை சோதனையைச் செலுத்தி—துன்பத்தை
வெல்பவரில் இன்பமாய் இதழ்விரிப்பான்! 191

இதழ்விரிப்பான் விசையுறு மனம்தந்து
நசையறு குணத்தினால் நயம்பல சொல்வான்
அந்த நாராயணன் சேவடியில் பூத்துவிடும்
மலர்யாவும் மரணமிலா மனமலர் அன்றோ? 192

அன்றோ? இன்றோ? என்றோ? என்று என்னுள்ளம்
தாவிக்குதித்து, தலைகால் புரியாமல் ஆடுவதும்
ஆவியின்மேல் வைத்ததினால் வந்தவினையா?
அல்லதென் பாவமூட்டை தந்த பலனா? 195

பலனாகி, பருவத்தில் பெயும் மழையுமாகி
நரசிம்மம் வந்து நம்முடன் உலவுவதற்கே
புண்ணியம் பண்ணி பிறர்பசி தீர்த்துவிட்டால்
கண்ணியநாதன் வைகுந்தம் மறந்திடுவான்! 194

மறந்திடுவான் நாமவனை மறந்திட்டாலே
மருந்திடுவான் தூயஅன்பு உடலத்தில்—அந்த
நேசநாதன் யெனைநேசித்தும்—பணவாளே
என் கழுத்தை அறுப்பதற்கு ஏன் படைத்தான்? 195

படைத்தான் புவியுலகில் எனையுந்தான்
பரிதவிக்க விட்டுவிட்டான் கவலையினால்
அவன்பெயரைச் சொல்வதனால் துன்பம் என்றால்
அவனியோர்கள் தெய்வத்தை வணங்குவாரோ? 196

வணங்குவரோ வண்ணமேகனை, வாஞ்சையில்
பிணங்குகின்றப் பித்தசரீரம் பிரிந்தொருநாளில்
வீழ்வது மண்ணில மெய்யன்றோ?—கண்
திறந்து யார்தான் பாழ்கிணற்றில் வீழ்வாரோ? 197

வீழ்வாரோ? விதிப்பாதை நடந்துமனம்
கசப்பைத்தான் கண்ணன் காலடி வைப்பாரோ?
என் மூச்சில் துக்கந்தான் ஏனிந்த ஏக்கந்தான்
வாழ்விலே யான்வாங்கும் கடனெல்லாம் அடைவதும்
எப்போதோ? 198

எப்போதோ தேய்ந்த மனம் உனை நாடும்
முழுநிலவானக் கதை நானறிந்தாலும்
கிரகத்தின் ஆசானே கீழ்மக்கள் பெருந்தெய்வம்
வானொளியில் நீதானே வரவேண்டும் நிறைநிலவே! 199

நிறைநிலவே! நீயேயிலா உறவுநிலையே
கோபாலகிருஷ்ண ரூபமே—என்னுள்ள
இராகத்தின் இன்பத்தாளமே!—உனைவணங்கின்
உலகிலே துன்பமில்லை, உள்ளத் தாழ்வுக்கு
இடமில்லை! 200

இடமில்லை இனிதுன்ப அரக்கனுக்கு
இருதயம் சுத்திசெய்வான் சுந்தரநாயகன்
வேதங்கள் வேண்டிடும் திருகிருஷ்ணமூர்த்தியே—உன்
பாதங்கள் என்தலையில் பரவிடும் நாள்வருமோ? 201

நாள்வருமோ, யுன்கோலக்கண்ணில் கோலங்கள்
யான்காண அனந்தகோடியுயிர்களும்
ஆண்டவனைச் சேவிக்கும் பாசத்தாய்—நாரா
நாரணத் தாயைக் கைவிடேன் எந்நாளும்! 202

எந்நாளும் என்மனது உன் திருவடி தேங்கி நிற்கும்.
மண்ணாளும் மாந்தரெல்லாம் மாமாணிக்கம்யுனையறியாமல்
விண்ணாளும் வேந்தனை வீணாகப் புரியாமல்,
பெண்ணாண்டு தீக்குழியில் தீய்வதுதான் உன விதியோ? 203

விதியோ? வினையோ? பூமியிலே மானிடமும்,
சதிசெய்து மாள்வதுமே ஒரு வாழ்க்கைதானோ?
சதை புகுந்த நரம்பெல்லாம் பேரானச ரத்தம் ஓடும்!
பதை, பதைக்கும் நெஞ்சுடனே பாண்டுரங்கம்
மறந்தே போகும்! 204

போகும் பூவுடம்பும், புழு பூக்கும் பெண்ணுடம்பும்,
காமத்தில் விளையாடிச் சீழுடனே பூச்சிநெண்டும்,
கோவையிதழும்' கொங்கைகளும்—மானுடத்தை
மயானத்தில் கொண்டு சேர்த்துக் காலத்தை முடித்து
விடும்! 205

காலத்தை முடித்துவிடும் காமதேவன் விளையாட்டில்,
ஜாலம் பல செய்தழிந்தே தரங்கெட்டார்!
மாலவனை மறந்து நிதம் மங்கை சதை—இன்று
தருகின்ற நோய்மறந்து கெட்டலைந்தார்! 206

கெட்டலைந்துப் போவதற்கே மூச்சுவிட்டேன்,
பட்டழிந்துப் படுவதற்கா ஐம்பொறியை அனுசரித்தேன்,
மொட்டவிழ்ந்த முல்லையும வாசம் மறப்பதுண்டோ,
தட்டுகெட்ட நெஞ்சுமே தரணிவாசனைத்தான்
மறைப்பதுண்டோ? 207

உண்டா, இலையா, உன்னுதவி எந்தனுக்கே,
ஒன்றுள் ஒன்று சேர்ந்தாலே உயிர்பிறக்கும்,
கன்றும் பிரிந்து தாய்மறக்கத் தனிபோகுமா?
என்றும் மறவேன என்னப்பனே பாலாஜி! 208

பாலாஜி, நீயே பாவம் கரைக்கும் கடலாகி,
நிலையாகி, நிரந்தரமாய் நின்றபொருளாகி,
ஊனுக்குள் உறங்கும் உயிரின் விழிப்பாகி,
ஆத்மாவை ஆள்பவனும் அண்ணலே நீதான்! 209

உ

ஸ்ரீநாராயணன் துணை

# 'திரு நாராயணன் அந்தாதி'

நீதான் எனக்கு எல்லாமும் என்றெண்ணி,
நானிருப்பேன் நம்பிக்கை ஊஞ்சலிலே,
நாயகனே நீயிருக்க துன்பம் என்னை அணுகிடுமோ?
நாராயணனே உன் பூம்பாதம் என்னுயிர் அல்லவா? 1

என்னுயிர் அல்லவா என்று பக்தர் நினைக்குமுன்னே,
மண்ணுயிர் படைத்த மாயவனாம் ஓடிவந்து,
தன்னுயிர் அன்புக்காய் தந்துபூரித்து மகிழ்தலை,
விண்ணுயிர் அக்கும் விருந்ததான் பெரிய விருந்து! 2

பெரியவிருந்து பெருமானை வணங்கிடுதல்,
உரியவன், உணர்பவன் என்றிருந்து—கண்ணனின்,
கருணைமருந்துக் கொண்டப் பாவநிரங்கப்,
பெருமையை நினைத்தாலே சிறுமையே முடிவிடும்! 3

முடிவிடும் பொய்வினைகள் – கண்ணனூர்,
நாடிவிடு காதலாலே—எம்பெருமானைப்
பாடிவிடு பந்தங்கள் வாடிடவே – நீ
கண்டிடுவாய் கண்ணப்பன் திருவருளே! 4

திருவருளே, மணிவிளக்கின் ஒளிச்சுடரே;
அரும்பொருளே, ஆனந்தப் பிறப்புக்குக் கருவிடமே
என் ஐம்பொறியும், அப்பனை நினைத்துருகும்,
அன்பு செய்து, செய்துதுன்பத்தை மறந்திருக்கும்! 5

மறந்திருக்கும் மனமும் தினமுனைத் துதிக்கும்!
துறந்திருக்கும் துறவியரும் கணமேனும் உனைப் பிரிந்தறியார்
பண்டரிநாதன் பல்லாக்குப் பக்தருக்கே அந்த
முரளிதரன் முறுவலும் முற்றும் துறந்தவர்க்கே! 6

துறந்தவர்க்கேப் பேரின்பம் அவனுருவில்—ஆசை
இறந்தவர்க்கே அந்ாதி நாயகனும்—உலகத்தை
மறந்தவர்க்கே உலகளந்தப் பெருமானும்—புவியில்
சிறந்தவர்க்கே சித்திரனாம், திருமாலும்! 7

சித்திரைனாம் திருமாலும், சிங்காரத் திருத்தேரும்,
கண்டாலேக் கண்ணீரும் பொங்காதோ?—கண்ணா
உன் காட்சியெல்லாம் என்னுயிரை நான்காண்பதுவே,
என்றாலும் மிகையல்ல, என்னுயிரே நீதானே! 8

நீதானே அறம், பொருளும்—மனித
ஆன்மாத் தேடுகின்றப் பரம்பொருளும்,
கண்ணனே, மோகனக் கோபாலகிருஷ்ணா,
நான் உன்மேலே பணமானேன் மணிவண்ணா!

மணிவண்ணா என்னிடமே இருட்டுண்டு,
மண்ணுலகோர் செய்கின்ற பொய்ப்புரட்டு—அத்தனையும்
எண்ணிலா தவறுசெய்து சாக்கடையில் வீழ்ந்த என்னை,
களையிலா பூக்களடையாய் மாற்ற என்று நீ உளம்
கொண்டனையோ? 10

கொண்டனையோ காதப் பூ மனத்தினையே,
அதனால் தானோ மணம் காட்டாமல் மறைந்தனையோ,
ஒளி பிறந்த உன் நிழலில் எனக்கொரு வழி காட்டிட,
கலிபிறந்தக் கடவுளும் கனிந்து மனம் திறவாயோ! 11

திறவாயோ திருமாலுன் வழிக்கதவினையே,—நான்
அடைவேனோ முக்தியூர் சன்னதியையே,
எதற்காய் எனைப் படைத்தாய் யாரறியார்—அன்பு
உனக்காய் கனிந்தமனம் உன்னருள் பூக்கவே! 12

பூக்கவே வேண்டும் பூமிதன்னில் புண்ணியமாய்,
ஆக்கவே வேண்டும் அன்புயென்னும் உன் கண்களாலே,
காக்கவே வேண்டும் கலியுகத்தை உன் திருப்பாதம்,
என் கண்கள்
நோக்கவே வேண்டும் நோய்காணாக் கால் தன்னையே! 13

கால் தன்னையே நான் கைப்பிடித்தேன்,
காணாதசுகம்யாவும் புவிமேலே கண்டேன்,
கோனானே, உன்குணம் கண்டதாலே,
குளக்கண்ணில் ஆனந்தப் பூ மலர்ந்தது உண்மை! 14

உண்மையில உருவெடுத்தேன் உனைநினைக்கத்தானே,
பெண்மையில் பூததமனம் காய்ந்துபோகவே,
காயம்விட்டுக் கண்ணனை அடைவதற்கே நல்
ஆதாயம் வேண்டி அறம்செய்தேன் உலகிலே! 15

உலகிலே உனவடிவம் புண்ணியம்,
உனக்கேதுமில்லை ஒரு திருவுருவம்,
சடங்கும், சம்பிரதாயமும் சனங்களை ஏமாற்ற
அடங்கும் மனத்துடன் அன்பு செய்தலே அண்ணலை
வணங்கும் முறை! 16

முறையிலா மாக்களை மக்களாக்கி,
கரையிலா பசிப்பிணியைக் கழுவேற்றி,
பிறைநிலாப் பெருமானை நினைந்துருகி— தனி
அறையிலே அன்புநீர் சொரிந்தால் அதுபக்தி! 17

பக்தி எனதில்லை, அதுவும் உன்சக்தியே,—வணங்குவது
நான் சிந்தித்து, சிந்தித்து வந்தித்த உன்னுருவம்,
சிற்றெறும்பு நானும் சிறுகட்டி வெல்லமுன்னை,
மொய்க்கின்ற காலம் பொய்மறைகின்ற கோலம்! 18

கோலமென கோளவிழி கடலில் வீழ்ந்த,
ஞானமுனி நாரணனை நாளுணர்ந்து மகிழவே -எனை
தானமென என்தாய்தந்தாள் பூமிக்கே—நான் பாடும்,
கானமெல்லாம் கண்ணனவன் திருவூர்வலம்! 19

திருவூர்வலம், திருமாலவன் பொருவூர்வலம்,
என்கண் வீழ்ந்த இதயக்கிரைப் பார்த்தக்,
கருவூலம், அந்தப் பரந்தாமத் திருத்தேரும்,
வருமோ என் வீதிப்பாதை வழிதானே! 20

வழிதானே வண்ணநாயகன் பாதம்,— என்
விழிதானே, குழலொலியில் குறைபோக்கும் கீதம்,—உலகில்
பழியானேன் பகவானே யெனை நீயும்,
பிணையாக்கிப் பெருமுக்தித் தருவாயோ? 21

தருவாயோ தன்னலமில்லா உள்ளத்தை,
தரணியோர் துன்பம் நீக்க வருவாயோ,
ஆதிநாயகனே! அனந்த சயனனே!—நீயேஎன்
ஜோதியானவன்! உயிர்ச் சொந்தமானவன்! 22

சொந்தமானவன் என்றுநான் நினைத்தாலும்—நீ
பந்தமில்லாப் பசுங்கல்லாய்ப் படுத்திருக்க,
பந்தசொந்தம் தேடி நான் செல்வேன்—என்
சந்தமென்னப் பண்ணிலே விளையும்? 23

விளையும் நெல்போர்த்தும் பதர்போல,
களையினால் கற்றசெல்வம் போமோ?—இல்லை ஏழு
மலையிலே உறைந்த செம்மல் நீயும்,
அலைகடல் மகள்விட்டே அடியேனைக் காண்பாயோ? 24

காண்பாயோ கனிந்தவென் நெஞ்சினையே,
கண்ணீர்குளம் வெட்டுதற்கோ நான் பிறந்தேன்,
எனிந்த நிலையறியேன் எம்பெருமானே—நீதந்த
விதி இதுவென்றால், நான் என் சொல்வேனோ? 25

என் சொல்வேனோ? கைபுதைத்து நான் அழுவேனோ?
துன்பப் புழுக்கள் எல்லாம் துடித்தெனை நெண்டவே,
மண்படைத்துப் போட்டாய், மாயவா!—இன்று
மாற்றாந்தாய் போல்நடந்து, என்சிரித்தாய், இறைவா! 26

இறைவா உன்னாலே முடியாத ஒன்றுண்டா?
உலகையே உருவாக்கி, அதையழிக்கும் ஆற்றலிலே,
எனையேன் ஈடுபடுத்தி இப்படிக் கொல்கின்றாய்—என்
துணையான உன்பாதம் இன்றேன் நீங்கியதோ? 27

நீங்கியதோ நல்லுலகம் இல்லையய்யா!—நான்
தூங்கியதே கனவிலுனைக் காணக் காரணமே,—மனமெனும்
பாங்கிமகள் பாண்டுரங்கம் தேடிவந்தால்—நான்
வாங்கிவந்த வரமெல்லாம் புண்ணியமே! 28

புண்ணியமே புருஷோத்தமனை மனம் நினைந்துவிட்டால்,
எண்ணிய எண்ணமும் ஈடேறும் ஈசன் அருளிருந்தால்,
மண்ணில் உயிர்கள் வாழ்வது அவனாலே என்
கண்ணில் விளையாடும் கண்ணன் மனம் போலே! 29

மனம்போலே நடக்க மன்னன் மனம் வைத்தால்,
தினம், தினம் நினைதயாளன் கருணை ஊர்வலம்,
கணமும் பிரியாமல் என் நெஞ்சிலாடும்- அந்த
வீணாநாயகி நாதன் தந்தையே உலகின் ஆதியாம்! 30

ஆதியாம், அனந்தசயனம் அன்பின் மீதியாம்.
காதிலவன் குழலோசை துன்பத்தைப் போக்கும்,
பாதிப், பாதியாய்ப் பரிதவிக்கும் நெஞ்சம் பல்வழி காணும்.
நாதியற்றவர்க்கு நாராயணனே நல்ல ஜோதியாம்! 31

ஜோதியாம்! தூய ஒளிச் சூரியனாம்!
அரவிந்தம் சூழ்ந்த நல்லசிந்தையாம் அந்த
நாரணனை நம் மனது சேவித்தால் – நல்ல
நேரமென திருமகளும் நம்வீடு வருவாளே! 32

வீடுவருவாளே, வீடுதரும் நாயகனின்
வீடவளே; நாடு வீழ்ந்து வாழ்ந்த உடலம்,
காடுநோக்கிப் போகும் காலம் மெய்தானே,
நாடும் மனம் நாரணனைச் சேரும் தினமே! 33

தினமேத் துன்பத்தில் உழல்கின்றேன்—மாயவன்
தினகரன் நினைந்த நெஞ்சும் பசியாலே வாடுதற்கா
தினம்,தினம் கோவிந்தன் கால் பிடித்தேன்!
துன்பத்தை மணந்துகொண்டு துயரத்தில் மூழ்கி
நின்றேன்! 34

நின்றேன் நிம்மதிகெட்டு நெஞ்சுத்
துணிந்தேன் வைகுந்தன் மறுத்தாலும் அவனைச்சேர,
பணிந்தேன் இருகண்ணில் உப்புநீர் ஊற்றுப்பெருக,
கனிந்தே வரவேண்டும் கண்ணப்ப தெய்வமே! 35

தெய்வமே யென்னெழுத்து ஆற்றுள் வீழ்ந்தக் கல்லோ!
நீதரும் சிந்தனையும் கிணற்றுத் தவளைதானோ?
உனையெண்ணி, உனக்காகக் குருதியால்
எழுதுகின்றேன்—நீ
எனையெண்ணி, எனக்காக எப்போது மனமிரங்குவாய்? 36

மனமிரங்குவாய் இம்மனிதப் பூச்சியைக் காப்பதற்கே,
குணமுண்டு, பணமில்லை குணாளா—உன்
குறுவிளக்கினை நீயே மறக்கலாமா?—உலகில்
நன்று விளைந்த நற்றமிழ்ப் பாட்டைத்தான்
மறக்கலாமா? 37

'மறக்கலாமா மண்ணுக்குள் புகுந்த உடலை',
என்று பாமரர் கேட்கும் கேள்வியர்ய்,
நானிருப்பேன் உன்முன்னால், நாரணா!
எனை நீ என்று கண்டு துன்பம் துடைப்பாயோ? 38

துடைப்பாயோ என்னிரு கண்ணின் நீரை,
துன்பம் பிறந்து வளர்வது எல்லாம் என்முலம்,
என்றறிந்தும் ஏனிந்த மௌனம்தானோ—அன்பு
சுரக்கின்ற உன்னிழலும் என்துன்ப வெயிலைத்தான்
தடுக்காதோ? 39

தடுக்காதோ மனமே தரணி ஊழலைத்தான்,
அடுக்கான துன்பப் பல்லக்கே சொந்தமா எந்தனுக்கே
தடுக்கி விழுந்தால் இங்கே தவறுதான் வந்துநிற்கும்
பாவிநான்
விடுக்கின்ற விண்ணப்பம் உனைஅடையாதோ கேசவா! 40

கேசவா, கோவிந்தா, கேளென் மனக்குறையை,
உனைநினைக்கும் போதினிலே உலக எண்ணம் குறுக்கே
வரும்,
பறந்திருக்கும் மனம்தன்னைப் பகவான் உன்னிடத்தில்,
நான்திருப்பும் நாள்வந்தால் நலம் விளைந்து
—மகிழ்ச்சி வரும்! 41

வரும் அறிவும், வளரும் பகுத்தறிவும்,
என் திறமையென யார் நினைத்தாலும், எல்லாமும்,
இவ்வுலகில் பெறுகின்ற பொன், பொருள், வெற்றி யாவும்,
பெருமாளின் கருணையென்று உணர்பவரே உன்னை
அறிவார்! 42

உன்னை அறிவார் உலகின் உயிர் அறிவார்,
தன்னை உணர்ந்தார் தயாளனை அடைந்தார்,
கண்ணனைக் கண்ணனுக்காய் காட்சியாக்கியவர்,
விண்ணையும், மண்ணையும் விநாடியில்
அளந்தவராவார்! 43

ஆவார் அன்பனுற்றாய் பணிசருமே ஒருநாள்,
சாவார் உலகநடப்பினின்றும் ஒருநாள்,
கூவார் கோவிந்தனை விடுத்து வேறேதும், - அந்த
பாரோர் நாள்வரும்; பரந்தாமன் வரும் நாளே! 44

பரந்தாமன் வரும் நாளே, பணம் வரும் நாளாம்!
நிரந்தரச் செம்மலை நிதம் நிதம் துதிப்பதால்,
மறந்திடும் புண்ணியம் மனத்தினில் விளைந்திடும்,
அனைத்து மன்பாய் ஆளவா நீயென் துயர்
துடைப்பாயோ? 45

துடைப்பாயோ துன்ப உதிரத்தை துணையாயிருந்து- என்
நினைப்பே நீதசனே நாராயணா!—வந்து
அணைத்தென்னை அன்பூட்டி வளரவிட்டால்- நான்
அணைப்பேன் அகிலமாந்தரையே அன்புடனே! 46

அன்புடனே கருடனேறி ஐயா என்குறைகளைய,
துரிது நீவரவேணடும், துடிக்குது என்மனமே,
நெஞ்சுக்குளம் நிரம்பியதால இருகண் பொய்க்கால்கள்,
உப்புநீர் ஓடவிட்டு இருகன்னத்தை ஈரமாக்கும்! 47

ஈரமாக்கும் உன்மொழியே என்னுள்ளத்தைப்,
பாரமாய் படைத்திந்த சந்தமலையில்,
கோரமான எண்ணங்கள், துயரத்தின பிறப்புக்கள்,
இப்பிறவி விளையறுக்க இதயமே உன்னைத்
துதித்தேன்! 48

துதித்தேன் துர்காதேவி அன்னனையே—அதனால்
உதித்த செங்கதிர் ஒளிவெள்ளமெனப் பாய—என்
மனமே சிரித்தது, சித்தனைக் கண்டதனால்—நான்
பித்தனானக் கதையே உன் ஒருவனால் தானே! 49

உன் ஒருவனால்தானே, உலக அச்சு சுழலும்,
பெண்ணாண்டப் பெருமாளை பெருமையுடன்
வணங்கினாலே,
சிறுமையான செயல்யாவும் செத்தேப் போய்விடும்,
அருமையான அநாதரட்சகன் அவன் தானே! 50

அவன் தானே ஆபத்பாந்தவன்—மக்கள்
துன்ப ஒலையைக் கிழித்தெறியும் காலன்,
தேவருக்கும், யாவருக்கும் தெய்வீக ஞாலன்—நல்ல
குணசீலன், பத்மாவதித்தாயின் சீனுவாசன்! 51

சீனுவாசன், சிந்தனை ஞானவாசன்,
மனுதர்மம் படைத்து, மறைவேதத்தைத் தந்த.
அலமேல் அம்மாவின் அன்புநாயகன்,
எங்கள் நாராயணன், ஏழைகளின் இறைவன்! 52

இறைவன் ஒருவன், ஈசனோடு கலந்த ஹரியே தலைவன்,
அனசந்த, அசையா உயர்களின் மூலத்தேவன்—எந்தன்
மனவாடியில் பிரதிபலிக்கும் ஞானத்த போவனன்—அவன்
நிழல் பாதம் ஒன்றே அமைதிதரும் சொர்க்கக்—கதவு 53

கதவிருந்தால் இல்லமேக் காக்கப்படும்,
கண்ணன அருளிருந்தால் ஆன்மா சுத்தி பெறும்,
ஒவ்வொன்றையும், ஒவ்வொன்றிற்காகப் படைத்த
ஒளிநாயகன்,
தன் பக்தருக்காய் தன்னையேப் படைப்பான்! 54

படைப்பான், படைப்பாவான், பல திறத்து
செயல்களை முடிப்பான்! முடிவாவான்—அன்பு
மூலமந்திரம் ஜபித்தால் வருவான்,—வந்து
நெஞ்சைத் தருவான் தெய்வநாயகன்! 55

தெய்வநாயகன் திருப்பாதத்தில் வைத்தேன் என் தலையை,
திருமகள் மணந்தவன் எனைக் கைவிடுவானோ?
ஆசைக் கிணற்றில் அலைமோதும் மானிடரில்,
பாசைச்செடி நானன்றோ? பகவான் தான் எனை
மறப்பானோ? 56

மறப்பானோ என்னன்பை, விழிதிறப்பானோ,
எனைக்கைதூக்கி விடவே, சந்தேக மருந்தை.
விழுங்கத்தான் தயாளன் இதயத்தில் வந்தானோ?—உனை
நம்பினேன் நாராயணா இனி உன் செயலே! 57

உன் செயலே எல்லாமும் என்றிருந்தயென்னைக்
கண்ணீரில் மிதக்கவிட்டு களிச்சிரிப்பு சிந்துவதும்,
எண்ணிலா விளையாட்டின் இன்னொரு பகுதியோ,
நானறியேன் நாராயணா, நல்லபடி வருவாயே! 58

வருவாயே, வாழ்க்கைக் கலித் தீர்ப்பதற்கே,
உன்னருளேத் தருவாயே, இப்பூதனிலே,
நான்படவே தாய் வயிற்றில் அனுப்பியென்னை,
நாய்ப்பாடாய் அலைவதற்கோ நமனுலகில்
பந்தம் வைத்தாய்! 59

பந்தம் வைத்தாய்; பரிதவிக்க விட்டு விட்டாய்,
எந்த சொந்தம் இருந்தபோதும் என்னிலைமை,
கீழான நிலை வரவா உனை நினைத்தேன்,—உன்
கீர்த்தி என்று என்னைச் சேர்ந்து சிரிக்க வைக்கும்! 60

சிரிக்க வைக்கும் மருந்தெல்லாம் உன்பாதம்,
அதைக் கண்டெடுத்தும் கண்ணீரில் மிதவையான,
என் என்புசதை வளர்ந்த ஆசை ஒழிவதற்கே,
என்னய்யன் நீயே அன்பு வைக்க வேண்டும்! 61

வைக்க வேண்டும் மனம்தனிலே அன்பு நெஞ்சம்,
தைக்கவேண்டும் துயரக்கழிசலையே எந்தன் நெஞ்சில்,
வதைபடவே வாழ்ந்துவிட்டேன் புவியுலகில்,
கதையில்லைக் கண்ணா, கண்ணீரின் சாட்சி இது! 62

இதுதான் வழியா? இறைவனவன் விதியா?
எப்பிறவியில் யார் கொடுத்தேன்? எந்தபிள்ளை
சோற் பறிததேன் பஞ்சமா பாதகம்தான்
வஞ்சமிலாமல் செய்தேனா? நானறியேனே! 63

நானறியேனே,'நான் செய்தப் பிழையினையே,
துணிந்தே வாழ்கிறேன், உலகதுன்பம் என்செயும்?
பணிந்தேன் என் பகவானை, துன்பம் பனிபோலேப்
போய்விடும்—என்
பற்றெல்லாம், செல்வமணிந்த சீராளன் திரு நாராயணன்! 64

நாராயணன், நல்ல நினைவாளன், நமன் வணங்கும்
ஆதிவாணன், அநாதரட்சகன், ஆபத்பாந்தவன்—அந்தப்
பாண்டுரங்கம் பாதம் காட்டும் பணவழியை—அதனால்,
பழியெல்லாம் நீங்கச் செய்யும் முற்றும் உண்மை, 65

உண்மையிலே உனை நினைத்தேன் கண்ணா!—நான்
ஓங்கிப்புகழ் பெறுவதற்கேயெனை வளர்த்தாய்,
தாங்குகின்ற துன்பமெல்லாம் தரப்போவதற்கு
நல்லதென்றால், தயாளன் நீயே உலகின் வழி! 66

வழியில்லாமல் வாடுவது உன்குழந்தை
விழிதிறக்காது மௌனித்து இருக்கின்றாய்!
பழியேறிதலைமேலே, அவமானத் தலைப்பாகை—என்
சுழியோ எதையெடுத்தாலும் துன்பப்படுவதற்கே! 67

துன்பப்படுவதற்கே மனிதன் என்றால்,
தூயபக்தி சிறப்பதெப்போ? தெய்வநேயம்
அறிவதெப்போ? சந்தேகப் பேய் புகுந்தால்
இதயச் சன்னதியில் சாத்தான் புகுவானே! 68

புகுவானே புனிதஉயிர் மேனியிலே,
பகவானே உன்னருளிருந்தால் உலகினிலே,
அடையாத பேறென்ன அற்புதனே!—நற்
கொடையான உன்னன்பே யானெண்ணும்
பெருஞ்செல்வம்! 69

பெருஞ்செல்வம் மாயவன் இதழ்ச்சிரிப்பு!
வருவிருந்துப் பார்த்திருக்கும் தமிழுனைப்போல் —கண்ணன்
தரும்விருந்து ஆன்மமருந்து அதனாலே,
பொருமையுடன் புனிதனை நினைந்தாலே முக்திதானே! 70

தானே பெறும் கல்வி, செல்வம் புகழ் யாவும்
ஞானத்தில் பெற்றதென்று, உண்மைகாணாமல்
தலை நிமிர்த்தி,
ஆணவத்தில் ஆடும் உள்ளம் ஆண்டவனை மறக்கும்,
அதுயில்லையென்று கோவிந்தனைக் கும்பிடக் கோடிபல
ஓடிவரும்! 71

ஓடிவரும் பாவமெல்லாம் என் பொருட்டே,
ஆடிவரும் துன்பமெல்லாம் அடியேன் செயலே,
நாடியுன்னை நான்பணியும் காலம், 'நான்' போகும்— நீ
தேடிவராமல் இருப்பதெல்லாம் 'நான்'
துன்பப்படுவதற்கே! 72

துன்பப்படுவதற்கே துய்த்துத் துய்த்து மூழ்த்தேன்,
இன்பமென்ற எதையும் அறிந்திலேன் கண்ணா!
உந்தன் அன்பைய்ய உண்டேன; என்றும்
எந்தன் அன்பையே தந்தேன் நாரணா! 73

நாரணா! நமச்சிவாயன் மைத்துனா!
வந்துனை தொழுதார்க்கு வரமுண்டே!
வாழ்த்துனைப் பாடினால் பலனுண்டே! கண்ணனின்
ஒளிகண்டேன்! கண்ணன் காதலில் மெய்யுணர்ந்தேன்! 74

உணர்ந்தேன் உலகப் பெரும் பொருளை,
உறங்கிலேன் அதனருமை யுணர்ந்ததாலே,
நெஞ்சில் கலங்கினேன், என்றேனுமவனைப் பிரிவேனோ
யென்றே,
பஞ்சில் பற்றும் தீயாவான் பக்தர் மனத்தினிலே! 75

மனத்தினிலே மாயவனார் வந்து, வந்து,
பணவாசை நீக்கியருள் புரிந்தமையால்,
குணக்குதிரை ஏறியென்றும் நற்பாதை
எனதாக்கி இறைவனைத் துதித்திடுவேன் மனத்தினிலே! 76

மனத்தினிலே தினம்வரும் இடையனை,
கனவினிலே கண்டு, கண்டு கலவியின்பம்,
பெற்றதனால் பிறந்த பயன் முடித்தேன்!—என்
உயிரில் கலந்தவன் விலகுவதே உயிர்
துன்பப்படுவதற்கே! 77

துன்பப்படுவதற்கே இப்புவி வாழ்க்கையாம்,
இன்பங்களென ஏறும்எதுவும் பொய்வாகனமாம்,
மாண்புகள் கொண்டவன், என் மனங்கவர்ந்தவனே,
அந்த மகேசன் மைத்துனன் காலடியே யான்பெறும்
கோடி! 78

கோடி பல தேடிவரும் கோவிந்தன் காலடியால்,
பாடிப் பாடி சேவித்தாலே பாவமூட்டைக் குறைந்துவிடும்—
எங்கள்
பரந்தாமன் பல்லக்கில் பாசமன்பு ஏறிவரும்—அந்தப்
பாதை நீ தெரிந்துவிட்டால் பாவவூர் மறைந்துவிடும்! 79

மறைந்துவிடும் மாயக்கூடு உடம்புமே—அதில்
நிறைத்துவிடு அன்பையே தெம்புடனே—பின்
கரைத்துவிடு கண்ணன் மேற்காதலையே—நன்று
கிடைத்துவிடும் இப்புவி இன்பமே! 80

புவி இன்பமே உத்தமன் நாரணனை எண்ணுதல்,
கலகமனம் தினம் நினைக்கும் கன்னியரின் கட்டமுகை,
புற்றுநோய்ப் படிந்த உள்ளம் புரையோடிப் போவதற்கே,
கற்றுத் தேர்ந்தக் கல்வி விட்டு, கலவியிலே
மூழ்கி நின்றோம்! 81

மூழ்கி நின்றோம் பொறாமை நதியினிலே,
வாழுகின்றோம் துரோகப் பூமியிலே,
தாயுதிரம் நீங்கி வந்து தரணியிலே வளரும் வரை,
சாயும் மனம் கொண்டதினால் பொய்த்துணியே
நெய்துவிட்டோம்! 82

விட்டோமிலை வீணாசைச் செயல்களையே,
விதிநாய் போற், பணயிலைக்காய்ப் பட்டோம்,
நாதியற்ற மானுடத்தை நம்பி விட்டு,
ஆதிமுதல் நாரணனை ஆசையாலே துறந்துவிட்டோம்! 83

துறந்துவிட்டோம் நல்லசெயற் நிகழ்ச்சிகளை,
மறந்திருந்து மாயவனை இகழ்ந்ததனால்—பாவப்
புதைச்சேற்றில் இறங்கிவிட்டுப் படிப்படியாய்க்,
காதளவு மூழ்குகையில், கண் திறந்ததனால் என்ன
பயன்? 84

பயன் அவனே! பசும்பொன் அவனே!
மயன் அவனே! மனத்தின் திறன அவனே!
பலன் அவனே! பணத்தின் குணம் அவனே!—நல்ல
உளன் அவனே! நம்நம்பிக்கை நாற்றவனே! 85

நம்பிக்கை நாற்றவனே யானதினால்,
நல்லயின்பம் அறுவடையாய் விளைந்துவிடும்!
மாயவனை நினைந்து, நினைந்து மூழ்கும் உள்ளம்,
காயச்சட்டைக் கழட்டிப்போடக் கடிதே எண்ணும்! 86

எண்ணும், எழுத்துமாய் ஈசனே இருப்பதையே,
கண்ணும், கருத்துமாய் கற்றுணராக் கயவருமே
பேதம் கண்டு காலத்தைக் கடன் வாங்கித் தொலைத்தாரே—
அதனால்
வேதநாயகம் பாதம்தான் மறந்தாரே! 87

மறந்தாரே மனத்தின்னவன் மனத்தினையேப்,
புரியாமல் வாழும் வாழ்க்கைப் புதிரலைவா,
துன்பச்சுழல் உள்ளிழுக்கும்—புவித்
துயரம் வந்து வாழ்க்கையையே மூழ்கடிக்கும்! 88

மூழ்கடிக்கும் ஆசைவெள்ளம்—அதை
அணைகட்டித் தடுத்துநிற்கும் மானுடமே—நீ
கருணைகொண்டு கண்பார்த்தால்,
காலவெள்ளம் கரைந்துவிடும்! 89

கரைந்துவிடும் கற்பூரம் என்உளம் சொல்லாதோ?
கண்ணீரும் உன்காலடியை ஈரப்படுத்தாதோ?
காலத்தின் கருவான உன்எண்ணம்—என்றும்
ஞாலத்திருவல்லவா? நாயகனேக் காப்பாயே! 90

காப்பாயே என் குடும்ப விளக்கினையே,
பணஎன்னை இல்லாமல் உயிர்த்திரியும் தீயத்தான்,
மனம் நீ வைத்தனையோ? மகேசன் மைத்துனனே,
குணமுடன் வந்தென்னைக் குற்றம் நீக்கிப் பார்ப்பாயே! 91

பார்ப்பாயே பாருலகில் நான்படும் துயரினையே,
கேட்பாயே என் முகாரிப் பாடலையே,
பட்டினியும், தரித்திரமும், பரவலானப் பாழ்நோயும்,
என்செல்வம் என்று நீ எனக்காகத் தந்தனையோ? 92

தந்தனையோ நம்பிக்கையிழந்துப் பிறர்தூற்றும் உடலை,
நாணயத்தை விடுவதற்காய் சூழ்நிலையை
அமைத்தனையோ,
அவமானத் தேரைத்தான் அடியேன் இழுத்துவர,
உவமான நாயகன் உளம் நீ கொண்டனையோ? 93

கொண்டனையோ கல்லான உருவம்போல் நெஞ்சினையும்,
தண்டனைதான் நான்பிறந்த பிறவிஎன்றால்—உனை
வந்தனை செய்த உள்ளம் வாடத்தான் வேண்டுமா?—நீ
எத்தனைக்கைவிட்டே இருக்குமிடம் மறைந்து நின்றாய்! 94

நின்றாய் கருணையிலாக் கல்லாய் பக்தர்மனம்
கொன்றாய்ச் சோதனையால் பலசெய்து,
தாங்கும் வரை தாங்கும் உள்ளம் ஒருநிலையே,
பின்னேங்கும் நிலைவரவா நான் நினைத்தேன்
உனைத்தானே! 95

உனைத்தானே என்றும் எண்ணினேன்,
உளம் எங்கும் உன்னுருவை நிரப்பனேன்—போர்க்
களம்போல் பூமிதன்னில் வாழுகின்றேன்,
வார்துளசியணிந்த நீ வாராயோ மணிக்கண்ணா! 96

கண்ணா, என் கண்ணீரின் காரணம் பூமிப் பொருளாலா?
புழுப்பூக்கும் சதைப்பற்றும், மனப்புற்றுநோய்ப்பணமும்,
பேராசைப் பெருநோயும், பொறாமை வாதமும்,
எனைப் படுத்தும்பாடு ஈசன்மைத்துனா நீ அறியாயோ? 97

அறியாயோ மனித ஆணவத்தை,
தெரியாயோ அவர் மானங்கெட்ட வாழ்வையுமே,
புரியாத புருஷோத்தமன் நீயில்லை—உன் சிரிப்பு
விரியாத நிகழ்ச்சியுண்டா, பூதனிலே! 98

பூதனிலே விளைகின்ற வினையாவும்,
பூமகள் கண்ணாளா உன்னாலே,
நாமகள் என்னுள் வளர்ந்ததாலே—நானும்
நாரணன் பாடலெழுத, நான்செய்தேன் புண்ணியமே! 99

புண்ணியமே செய்ததாலே பூரணனை நம்புகின்றேன்,
பண்ணியவை நல்லவைதான் நாரணனை நாடுகின்றேன்,
கண்ணியமாய்க் காலந்தள்ள வழியில்லை,
பண்ணியப் பாவமென்ன, பரந்தாமா நானறியேன்! 100

நானறியேன் தீயதையே, இன்னும்பலக் கெட்டதையே.
ஆனாலும் கெட்டுவிட்டேன், ஆற்றாமல்
அழுகின்றேன்! காலத்தை எண்ணி, எண்ணி
கண்ணனுக்காய் ஞாலத்தில் வாழுகின்றேன்! 101

வாழுகின்றேன் வழிதெரியாமல் இருட்டினிலே,
பாருலகின் பந்தங்கள் பரந்தமனங் கட்டிப்போட,
காழ்ப்புணர்ச்சிக் கொண்டு தினம் அலையும்போது,
தாழ்வுணர்ச்சி நீக்கவொரு தயாளன் வருவான்! 102

வருவான், வந்துபல கதைகள் சொல்வான்,
தர்மத்தின் வாசல்தன்னைத் திறந்துவிட்டே,
தாழித்தயிர் வாயொழுகத் தர்மமாய்ச் சிரித்திருப்பான்,
பாழுயிரின் பற்றழிக்கப் பலகீதை திரும்பச் சொல்வான்! 103

திரும்பச் சொல்வான் தன்னை நோக்கி,
விரும்பி வருவான் விழியைப் பார்த்து.
தென்சன்பு வாசம் கண்வழி மலர
கொஞ்சியே வருவான் கோபால இராஜனே! 104

இராஜனே! இரதிதேவி மாமனே!
காமனே! காலதேவனே! ஞானமுளையே,
நல்லபாடலே! தேவவேதமே!
தெய்வநாதமே! தேவகானமே! 105

கானமே, சன்னலாம் கரும்பின் சுவையே,
அரும்பவிழ் வாசமுல்லையே, ஆசைஇரதமே!
சங்கு, சக்கரபாணியே! சந்தன மேனியே!
பந்தன ஆன்மனே! பரமன மைத்துனா! 106

பாமன் மைத்துனா! பாவமுடிச்சவிழ்க்கும் பரந்தாமா!
எழுக்குணமே, ஏங்கியவர் சொர்க்கப்பதமே!
ஞான இரதமே! நல்லத் தீந்தமிழே!
பாவலர் அமுதமே! வண்ண மேகமே! 107

மேகமே! அறிவுத்தாகமே எந்தன்
பேரின்ப லோகமே! பெருமாள் அரசனே!
எந்தனுயிர் ஆளும் நேசனே! ஈன்றதாயினும்
சாலப பிரியும் மூலதேவனே! முரளீதரனே! 108

முரளீதரனே மோனத்தவப் பெருமையே!
ஞானச்சாற்றுப் பழமே! கானமையிலே!
கருப்பு முத்தே! விருப்பு உருசியே!
விருந்துக்கு விருந்தே! விண்ணாளும்வேந்தே! 109

வேந்தே, வேய்மனத்தின் அன்புச்சாந்தே!
நோய்க் காணாப் பாதமே! நொந்தவர் மனஆறுதலே!
ஏழ்ப்பிறப்பறுக்கும் ஏற்தலே! ஏங்கியவர் தெய்வமே!
கண்டப்ப மருந்தே! காயத்தைக்களைய நன் ஆன்மச்
சட்டையே! 110

ஆன்மச் சட்டையே! அறிவுப் பெட்டகமே!
அன்புக்கு மூலமே! அன்பர்க்குத் துணையே!
என்புருக வேண்டி நின்றால், எங்கிருந்தாலும் வருமரசே!
என்னன்புக்குளம் நீ தந்தது தானே! 111

தானே வந்து நெஞ்சில் படியும், உந்தன்
தர்மயென்னும் உலகம் உய்யும் வரை வாழும்!
நாராயண மந்திரம் நல்லவைத் தந்திடும்,
காரணக் காரியமானவன், எங்கள் கரியனே! 112

கரியனே! காலனுக்குக் காலனே!
காலம், உன் கால் வணங்கும் ஐய்யனே!
மெய்யான மேனியென்று மேதினியார்,
எண்ணும் எண்ணம் பொய்யான பொம்மைதானே! 113

பொம்மைதானே பூவுலகம், அழுகியப்
புழு பூக்கும் பெண்ணுடம்பும், பழகியப்
பொருளாசை மரணத்தின் வழிதேடும்.
பூங்கண்ண விலாசமே, புண்ணியத்தைப் புரவி
யேற்றும்! 114

புரவியேற்றும் புண்ணியங்கள் பூவுலகில்,
பரவிவரும் பரந்தாம மந்திரங்கள்,
சிரம் தாழ்த்திச் சிந்தனையைச் சீதாநாயகன்பால்,
கரம் குவித்துச் சேர்த்து விட்டால், சேர்ந்து விடும்
செல்வமெல்லாம்! 115

செல்வமெல்லாம் சீராளன் சிரிப்பழகே—நான்
கொள்வதெல்லாம அவன் கொள்கை ஒன்றைத்தானே,
சொல்வதெல்லாம் புவிமேலே பொய்யைத் தானே,
கொள்ளவேண்டும் அன்பான மெய்ப்பொருளை ஒரு
நாள் தானே! 116

நாள் தானே வருவதில்லை, என்றும்
நமன் சொல்லிக் கொல்வதில்லை,—கால
விதிமுடிந்து மதியாலே வென்றவரில்லை,
கதியவனே என்றாலே, காத்திடுவான் கோவிந்தனே! 117

கோவிந்தனே! கோவே! கொஞ்சுதமிழ்,
மிஞ்சுகின்ற அஞ்சுகத்தை ஆள்பவனே!
நஞ்சுண்ட நாயகனை நல்லபடி அன்புசெய்யும்,
வைகுந்த வாசனே! வண்ணமேகமே! 118

மெய்கின்ற நிலமாக மேனியெடுத்து,
காய்கின்ற வாழ்வியலை நம்பியதால்,
வாழ்கின்ற நாளெல்லாம் கண்டநேரம்—நெஞ்சை
வரைகின்றக் கோமெல்லாம் பரமன்வேடம்! 119

வேடம் ஏன் வேணுகோபலா?
கபடங்கள் தான் உன் கலையா?
கண்ணீரில் மூழ்கவா மனிதக்கலம் யென்னையும்,
சமுதாயக் கடலில் தள்ளினாய்; ஏன் தனியாகச்
சிரிக்கின்றாய்? 120

சிரிக்கின்றாய்! சித்துபலச் செய்கின்றாய்!
தெரியாமல் இருப்பது போல் தெய்வமாகி நிற்கின்றாய்!
அறியாமல் முனசெய்தப் பாவங்கள்—நிலைப்
புரியாத இன்னிலையில் புண்படுத்தி மகிழலாமோ? 121

மகிழலாமோ, மனம் அழுதுப் புலம்புகையில்,
உனைத் தொழுத பலனா, உயிர்த்துன்பம் தாங்குவதும்,
எனையேன் இப்படி இன்னல் செய்கின்றாய்?
எம்பெருமானே என்றும் உன் திருவடிச்சரணம்! 122

சரணம், மரணமிலா மனநேசனே,
வரனும் என்னிலைமை அறிந்தே நீயும்,
வாய்விட்டு அலற நான் பேதையில்லை,
வாடவிட்டு வாய்ப்புதைப்பதும் சரிதானோ? 123

சரிதானோ, சமநீதி கண்டவன் விடமுண்பது,
விரியன் பாம்பென உலகோர் பிடுங்குதற்கோ,
கரியன் நீ கலியுகத்தில் எனைப் படைத்தாயோ? நான்
மரிக்கும் நாள் வருமோ உன் மகிழ்ச்சி வெள்ளம்! 124

மகிழ்ச்சி வெள்ளம் ஆணவப் பாறை மோதும்,
தர்ம என்னும் தரணியையே வாழவைக்கும்,
கர்மங்கள் செய்தபலன், கண்ணீரில் மூழ்கினேன்,
அதர்மங்கள் அழிக்கவரும் அண்ணலே நீதான்! 125

நீதரன் எனைக்கண் கொண்டறியவில்லை
புவிதான் என் திறமை உணரவில்லை
நான்தான் அனற்புழுவாய் அலறுகின்றேன்
கண்போனபின் காட்சிவந்தால் நியாயமென்ன? 126

நியாயமென்ன நிமலனே நான் துன்புறவே
பாயிரங்கள் உன்செவியில் பதியவில்லை—என்
ஆயிரங்கள் உனையுந்தான் விலைபேசிடுமோ?—உலக
ஓவியங்கள் துன்பத் தூரிகையால் வணங்குமோ? 127

வணங்குமோ மனம் உனைத்தான், பிணங்குமோ தினம்
கணங்களை அடக்கிய உன் கையொன்று—என்
கண்ணீரைத் துடைக்குமோ, நானறியேன்!
அந்நியன் நானில்லை அமரனேக் கருணைகொள்! 128

கொள்வதெல்லாம் சிறப்பில்லை - வாய்
மெல்வதெல்லாம் உணவில்லை—நெஞ்சு
அள்வதெல்லாம் அனந்தசயனமில்லை—என்மனம்
சொல்வதெல்லாம் உனைத்தானே நாராயணா! 129

நாராயணா எனும் நாமம் நமனை விரட்டும்
தானாய் வரும் துன்பமெல்லாம் மெழுகாய்க் கரையும்
ஏனோ, தானோ என்றலையும் நெஞ்சம் நிலைபெறும்
சீனுவாசனுள்ளே சித்தம் விழித்துச் சிரித்து நிற்கும்! 130

நிற்கும் மலவுடம்பு ஆசை நாற்றமடிக்கும்
கற்கும் வித்தைகளை காசினாலே கற்பழிப்பார்
நிதம் நிற்காமல் பறக்குமிந்தப் பாழுலகில்
பாவங்கள் ஓங்கி நின்று புண்ணியங்கள் புளித்தே
போகும்! 131



## நூலாக வரவேண்டிய தெருப்பாடகனின் திருப்பாடல்கள்

1. திரு நாராயண அந்தாதி—1009 பாடல்கள்
2. தெருப்பாடகன்—காவியநூல்
3. விடுதலை — காவியநூல்
4. திரு நாராயண அலங்காரம் — 1009 பாடல்கள்

## தனிக்கவிதைகள்

| | | |
|---|---|---|
| 1. | கனவுப்பாலங்கள் | — 50 கவிதைகள் |
| 2. | பாதிப்புகள் | — 28 ,, |
| 3. | பர்ணசாலைகள் | — 36 ,, |
| 4. | மன வேள்வி | — 39 ,, |
| 5. | எரியம்புகள் | — 28 ,, |
| 6. | சூர்யக் குஞ்சுகள் | — 38 ,, |
| 7. | ஆத்ம சோதனைகள் | — 46 ,, |
| 8. | ஈட்டி முனைகள் | — 51 ,, |
| 9. | பாசத் திட்டுக்கள் | — 34 ,, |
| 10. | பாவனைகள் | — 39 ,, |
| 11- | கவிக் கதம்பம் | — 50 ,, |
| 12. | தெருப்பாடகனின் நாட்டுப்புறப்பாடல்கள் | — 50 ,, |

திரைக்கு வராத திரை இசைப் பாடல்கள் — 2000

தொலைககாட்சி 13 எபிசோட்டுகள்

''எண்ணங்கள் மாறலாம்''

நாவல் : ''இருட்டின வெளிச்சங்கள்''
''புகைக் குயில்கள்''

## ரேடியோ நாடகங்கள்

சென்னை கிறிஸ்தவக் கலைக்கழகத் தொடர்பு நிலையத்தால் பீபாஸ்டேஷனில் ஒலிபரப்பப்பட்ட 150 நாடகங்கள்.

சென்னை சாந்தோம் கிறிஸ்தவக் கலைக்கழகத்தொடர்பு ஒலிபரப்பிய 100 நாடகங்கள்.

இதயம் பேசுகிறது ஆசிரியர் மறைந்த திரு. மணியன் அவர்களால் ஒலிபரப்பப்பட்ட ஒலிநாடா வடிவ தெருப்பாடகனின் ''முகாரி முத்தங்கள்''